## தமிழ்ச் சங்க ஆட்சிக் குழு

| | |
|---|---|
| முகவை மன்னர் திரு. நா.குமரன் சேதுபதி | தலைவர் |
| திருமதி. இலட்சுமி சேதுபதி | துணைத்தலைவர் |
| திரு. இரா. அழகுமலை எம்.ஏ., எம்.ஃபில்., | செயலாளர் |
| திரு. மா. சங்கரபாண்டியன் பி.ஏ., பி.எல்., | உறுப்பினர் |
| திரு. டாக்டர் ந.சேதுராமன் M.S., M.Ch., M.N.M.S. (Uro) F.I.C.S., | உறுப்பினர் |
| திரு. ச.பரங்குன்றம் பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. இரா.குருசாமி பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. க.முத்தையா பசும்பொன் பி.ஏ., பி.எல்., | உறுப்பினர் |
| திரு. இரா.கண்ணன் | உறுப்பினர் |
| திரு. மா.ச. கார்த்திகேய பாலாஜி பி.இ., | உறுப்பினர் |
| திரு. எஸ்.எம்.நாகராசன் பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. பி.வீரணன் | உறுப்பினர் |

## கல்லூரிக் குழு

| | |
|---|---|
| டாக்டர் திரு.ந.சேதுராமன், M.S.,M.Ch.(URO).,M.N.M.S.(URO).,FICS., | தலைவர் |
| திரு. மா. சங்கரபாண்டியன், பி.ஏ.பி.எல்., | செயலாளர் |
| திரு. இரா. அழகுமலை, எம்.ஏ., எம்.ஃபில்., | உறுப்பினர் |
| திருமதி. இராணி இலட்சுமி நாச்சியார் | உறுப்பினர் |
| திரு. ச.பரங்குன்றம், பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. இரா.குருசாமி, பி.ஏ., | உறுப்பினர் |
| திரு. மா.ச.கார்த்திகேய பாலாஜி, பி.இ., | உறுப்பினர் |
| திரு. க.முத்தையா பசும்பொன் பி.ஏ., பி.எல்., | உறுப்பினர் |
| திருமதி. வாசுகி ராஜா எம்.எஸ்.சி., எம்.ஃபில்., | உறுப்பினர் |
| திரு. இரா.கண்ணன் | உறுப்பினர் |
| திரு. மா.ச.மாரியப்ப முரளி பி.ஏ., பி.எல்., | உறுப்பினர் |
| இராஜா. திரு. முருகதாஸ் தீர்த்தபதி | உறுப்பினர் |
| டாக்டர் திரு. க சின்னப்பா பி.எச்.டி., முதல்வர் | உறுப்பினர் |
| டாக்டர் திருமதி. வீ.காந்திமதி பி.எச்.டி., இணைப்பேராசிரியை | உறுப்பினர் |
| டாக்டர் திருமதி. செ.தனலெட்சுமி பி.எச்.டி., இணைப்பேராசிரியை | உறுப்பினர் |

பல்கலைக்கழக உறுப்பினர்

# செந்தமிழ்

(தோற்றம் 1903)

தொகுதி : 99
பகுதி : 10
அக்டோபர் 2005

திங்கள் இதழ்
திருவள்ளுவர் ஆண்டு 2036







| இதழ்க் கட்டணம் | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| ஆண்டுக் கட்டணம் | ரூ. 60 | ரூ. 600 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000 | ரூ. 2000 |
| தனி இதழ்க் கட்டணம் | ரூ. 6 | ரூ. |

ஆசிரியர் இரா. அழகுமலை எம்.ஏ., எம்.ஃபில்.,
செயலாளர் – மதுரைத் தமிழ்ச்சங்கம்.

பதிப்பாசிரியர் இரா. சதாசிவம் எம்.ஏ., எம்.ஃபில்.,
மதுரைத் தமிழ்ச்சங்கம், மதுரை–1.

# பொருளடக்கம்

# இதழ்மணம்

ஒரு நூற்றாண்டு காலம் திராவிட மொழியியல் அறிஞர்களுக்கு ஆசிரியராக விளங்கி மொழித்துறைக்கு வளம் சேர்த்த **பேரறிஞர் எமனோ** ஆகஸ்டு திங்களில் தனது 102வது அகவையில் இயற்கை எய்தினார் என்ற செய்தி உலகமெங்கும் உள்ள மொழித்துறை அறிஞர்களுக்கு பேரிழப்பாகும். இறுதிக்காலம் வரை அறிவுப் பொருளைத் தேடியும் தன்னடைந்தார்க்கு வழங்கியும் வாழ்ந்த பெருவாழ்வு மறைந்தது. அப்பெரியாரின் மறைவுக்கு செந்தமிழ் அஞ்சலி செலுத்துகிறது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மொழிநூல் அறிஞர் பேராசிரியர் கி. அரங்கன் அவர்கள் எழுதிய **பேராசிரியர் எமனோ குறித்த கட்டுரை**-யை வெளியிடுகிறது.

**எழுத்துத்தமிழ்** என்னும் தலைப்பில் முனைவர் **பேராசிரியர் பெ. சுயம்பு** எழுதிய கட்டுரை இடம்பெறுகிறது. காலமாற்றத்தினால் சிறுபான்மை மக்கள் பேசுகின்ற மொழிகள் சிதைந்து மறைந்துவரும் அவலநிலையை நம்முடைய சிந்தனைக்குக் கொண்டுவந்திருப்பது உளம்கொள்ளத்தக்கது. எழுத்தில்லா மொழிகள் அழிந்துபடுவதைப் பேராசிரியர் சுயம்பு எடுத்துரைத்துள்ளார்.

புலம் பெயர்ந்துள்ள தமிழர்களும் தங்கள் தாய்மொழியை மறந்து ஆங்கில மொழியே தாய்மொழியாகக் கற்றுவருகிறார்கள். வருங்காலச் சந்ததியினர் தமிழ் அறியாத தமிழர்களாகப் புலம் பெயர்ந்த நாட்டில் வாழப் போவதை நினைத்து ஆற்றாமையால் வேதனைப்பட வேண்டியுள்ளது. தமிழகத்தில் உள்ள தமிழர்கள் உலகத்தின் பிறபகுதிகளுக்குக் குடியேறியுள்ள தமிழர்களின் மொழி, பண்பாடு, பாரம்பரியம் குறித்து ஒரு நெடுநோக்குத்திட்டம் வகுத்தல் வேண்டும்.

தமிழர்கள் தொல்காப்பியருக்கு முன்பிருந்து தமிழ்காப்பு முயற்சியில் முனைப்பாக விளங்கினர் என்பதற்குரிய சான்றாதாரங்களைப் பேராசிரியர் தம் கட்டுரையில் திறம்பட எடுத்துரைத்துள்ளார்.

**சங்கஇலக்கியத்தில் நாடகக்கூறுகள்** என்னும் தலைப்பில் **முனைவர் சுந்தரி** கட்டுரை வரைந்துள்ளார். ஆசிரியர் தமிழ்நாடகம் குறித்த அழுத்தமான பல கட்டுரைகளை எழுதுவதில் வல்லவர். அவர்கள் சங்கஇலக்கியக் காட்சிகளில் உள்ள நாடக அமைப்பை கட்டுரையில் எடுத்துரைத்துள்ளார்.

"நெஞ்சம் கவர்ந்தவளை வலிதில் சேர்தல் மணநூல் அறம் எனத் தலைவன் உரைத்தலும், மறுக்க இயலாமல் உடன்படுகிறாள் தலைவி" எனப் **பேராசிரியர் சுந்தரி** கொடுத்திருக்கும் விளக்கம் தமிழ் மரபுக்கு ஏற்புடையதாகத் தெரியவில்லை.

**"பண்டு நாம்**
**வேறு அல்லம் என்பது ஒன்று உண்டால்; அவனொடு**
**மாறு உண்டோ, நெஞ்சே! நமக்கு?"**

என்னும் தொடர்தான் உயிர்ப்பகுதி கபிலர் பிரிதோரிடத்திலும்,

"ஆற்றின் வாராராயினும் ஆற்ற
ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கென" பாடியிருப்பதாலும் களவியலில் தொல்காப்பியர் "ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்" எனக் காதல் பிறவிதோறும் தன்னைப் பற்றுவது என்னும் கோட்பாட்டை உணர்ந்த தலைவன் தலைவி ஒன்றுபடுவதாகவே கபிலர் காட்சிகளை அமைத்துள்ளார்.

வந்தவாசியிலிருந்து ஆய்வுக்கட்டுரையாக மனம் சொல் செயல் என மும்மையால் தமிழ் நெறி நின்று மாசற்ற வாழ்க்கை வாழ்ந்த தோழர் ஜீவானந்தம் அவர்களுடைய இலக்கியத்தைத் திறனாய்வு செய்துள்ளார்.

கடந்த சில திங்கள்கள் நான் வெளிநாடு சென்ற காலங்களில் பத்தாயிரம் ரூபாய் அளவுக்குச் செந்தமிழ் நிதி திரட்ட முடிந்தது. பேராசிரியர் பொன் கோதண்டராமன் புதுச்சேரியிலிருந்து கட்டுரைகள் அனுப்புவதோடு தன் நண்பரும் ஒரு சாலை மாணவருமாகிய அறிஞர் திருமலை அவர்கள் பெயரில் செந்தமிழ்ப் புரவலர் கட்டணம் வழங்கியுள்ளார்கள். ஒல்லும் வகையெல்லாம் செந்தமிழைப் புரந்து வரும் நல்லறிஞர் பெருமக்களுக்குத் தமிழ் உலகம் என்றும் கடப்பாடுடையது.

அடுத்த இதழில் பேரறிஞர் தி.வே.கோபலையர் அவர்களுடைய கட்டுரை இடம்பெறுகிறது என்பதை வாசகர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பதிப்பாசிரியர்

திராவிட மொழியியலில் கால்டுவெல்லுக்குப் பிறகு சிறப்பாக ஆய்வு மேற்கொண்டவர் பேரா. எம்.பி.எமனோ. அவர் 102 வயது வரை வாழ்ந்து திராவிட மொழியியலுக்குப் பெருமை சேர்த்தவர். 2005 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 30ஆம் நாள் அவர் மறைந்து விட்டார். அவருக்கு அஞ்சலியும் மரியாதையும் செலுத்தும் வகையில் அப்பேரறிஞர் குறித்த குறிப்புகள் கட்டுரையாக வெளியிடப்படுகிறது.

# பேரா. எம்.பி.எமனோ

கி. அரங்கன், தஞ்சாவூர்

பேரா. எம்.பி.எமனோ அவர்கள் கனடா நாட்டில் உள்ள லூனென்பர்க் என்ற நகரத்தில் 1904 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28 ஆம் தேதி பிறந்தார். 1923ஆம் ஆண்டு ஹலிஃபாக்சில் உள்ள டல்ஹவுசி பல்கலைக்கழகத்தில் (Dalhousie University) இளங்கலைப் பட்டம் பெற்றார். ஆக்ஸ்ஃபோர்டில் உள்ள பல்லியோல் கல்லூரியில் (Balliol College) சேர்ந்து இரண்டாவது இளங்கலைப் பட்டமும் பெற்றார். 1935 ஆம் ஆண்டு அவர் அதே கல்லூரியில் முதுகலைப்பட்டமும் பெற்றார். 1926 முதல் 1931 வரை யேல் பல்கலைக்கழகத்தில் (Yale University) ஃபிராங்களின் எட்கர்ட்டன் (Franklin Edgerton), இ.ஹெச். ஸ்டர்டெவெண்ட் (E.H. Sturtevant), எட்வெர்ட் சபீர் (Edward Sapir) ஆகிய அறிஞர்களின் வழிகாட்டலில் மொழியியலையும் மானிடவியலையும் பயின்றார். அப்போது அவர் சமஸ்கிருதம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளைச் சிறப்பாகப் பயின்றார். பின்னர் இலத்தீன் கற்பிக்கும் ஆசிரியராக அவர் பணிநியமனம் பெற்றார். 1931 இல் முனைவர் பட்டம் பெற்ற பின், அவர் யேல் பல்கலைக்கழகத்தில் சபீர் அவர்களுடன் இணைந்து ஆய்வு மேற்கொண்டார். 1935-38 ஆம் ஆண்டுகளில் தென்னிந்தியாவில் உள்ள நீலகிரி நிலப்பரப்பில் வழங்கப்படுகின்ற தோடா, கோதா, கொடகு ஆகிய மொழிகளையும் மத்திய இந்தியாவில் பேசப்படுகின்ற கோலாமி மொழியையும் ஆராய அப்பகுதிகளில் களப்பணி மேற்கொண்டார். இந்தியாவிலிருந்து திரும்பியதும் அவர் யேல் பல்கலைக்கழகத்தில் மொழியியல் கற்பித்தார். 1940ஆம் ஆண்டு அவர்,

பெர்கிலியில் உள்ள கலிஃபோர்னியாப் பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதத்தையும் மொழியியலையும் கற்பிக்கப் பேராசிரியர் நிலையில் சேர்ந்தார். 1953ஆம் ஆண்டு வாக்கில் மொழியியல் துறையை ஏற்படுத்தியதோடு 5 ஆண்டுகளுக்கு மேலாக அத்துறையின் தலைவராகவும் பணியாற்றினார். கலிஃபோர்னியாப் பகுதியில் பேசப்படும் அமெரிக்கன் இந்தியன் மொழிகளை ஆராயும் திட்டத்திற்கு அவர் கால்கோளிட்டார். 1971ஆம் ஆண்டு பணியிலிருந்து ஓய்வு பெற்றாலும் சமஸ்கிருதம் மற்றும் பொது மொழியியல் சிறப்புநிலைப் பேராசிரியராக (Emeritus Professor) அப்பல்கலைக்கழகத்தில் தொடர்ந்து பணியாற்றினார்.

பேரா. எமனோ அவர்கள் 1949ஆம் ஆண்டு அமெரிக்க மொழியியல் கழகத்தின் (Linguistic Society of America) தலைவராகப் பொறுப்பேற்றார். அமெரிக்கக் கீழ்த்திசைக் கழகத்தினுடைய ஆய்விதழின் (Journal of the American Oriental Society) பதிப்பாசிரியராகப் (1948-51) பணியாற்றினார். 1952ஆம் ஆண்டு அமெரிக்கத் தத்துவக் கழகத்தின் (American Philosophical Society) உறுப்பினராகவும் 1970ஆம் ஆண்டு அமெரிக்கர் கலை மற்றும் அறிவியல் கழகத்தின் (American Academy of Arts and Sciences) உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1969ஆம் ஆண்டு ராயல் ஆசியக்கழகத்தின் மதிப்புறு தகைமையாளராகவும் (Honorary Fellow of the Royal Asiatic Society) 1964ஆம் ஆண்டு இந்திய மொழியியல் கழகத்தின் (Linguistic Society of India) மதிப்புறு உறுப்பினராகவும் 1971ஆம் ஆண்டு பாக்கிஸ்தான் மொழியியல் ஆய்வுக்குழுவின் (Linguistic Research Group of Pakistan) மதிப்புறு உறுப்பினராகவும் பணியாற்றினார். 1966ஆம் ஆண்டு அனைத்துலகத் தமிழாய்வுக் கழகத்தின் (International Association of Tamil Research) துணைத்தலைவராகவும் பொறுப்பேற்றார். சிகாகோ பல்கலைக்கழகம் 1968ஆம் ஆண்டும் டல்ஹவுஸி பல்கலைக்கழகம் 1970ஆம் ஆண்டும் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கிப் பேரா.எமனோ அவர்களைச் சிறப்பித்தது.

பேரா. எமனோ அவர்கள் சமஸ்கிருதத்தில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்ததால் அவரைக் கலிஃபோர்னியாப் பல்கலைக்கழகம்

சமஸ்கிருதத்திற்கும் பொது மொழியியலுக்கும் பேராசிரியராக நியமித்தது. அவருடைய ஆய்வுகளில் பெரும்பாலானவை

சமஸ்கிருதத்துறையில் அமைந்திருந்தன. நான் அவற்றை இங்கு விரிவாகக் கூறவில்லை. மானிடவியலிலும் மொழியியலிலும் அவர் கொண்டிருந்த அக்கறை எழுத்து வழக்கில் இல்லாத பழங்குடி மக்களின் மொழி, பண்பாடு, நாட்டுப்புறப் பாடல்கள் / கதைகள், பழமொழிகள் ஆகிய பரப்புகளிலும் விரிந்திருந்தது. அவர் கோதா மொழியில் உள்ள பல வகையான தரவுகளைச் சேகரித்து நான்கு பகுதிகளைக் கொண்ட கோதா பனுவல்களை (Kota texts 1944-46) வெளியிட்டார். மொழியியல் மற்றும் சமூகப் பண்பாட்டுப் பரப்புகளின் விவரிப்பிற்கு இப்பணி ஒரு சிறந்த முன்மாதிரி என்பது மொழியியலில் தலைசிறந்த அறிஞரான ஜெல்லிக் ஹேரிஸீன் கருத்து. பல வகைப்பட்ட மொழிகளுக்கு இடையே உள்ள பண்பாட்டின் செயல்பாடுகள், தொடர்பு, பரவல் ஆகியவற்றின் ஆழமான புரிதலுக்குப் பேரா. எமனோ அவர்களின் ஆய்வுகள் மிக உதவியாக அமைந்துள்ளன. இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு பேரா. எமனோ அவர்கள் 1971இல் தோடா பாடல்கள் (Toda Songs) என்ற நூலை வெளிக்கொணர்ந்தார். ஒரு தனித்துவம் மிக்க கவிதை நடையைக் கொண்ட தோடா மக்களின் பண்பாட்டுப் பாரம்பரியத்தை ஆராய மொழியியல், நாட்டுப்புறவியல், இளவியல் (ethnology) ஆகிய தொடர்புடைய துறைகளின் கோட்பாடு மற்றும் அணுகுமுறையியலின் உள்ளொளிகளை இப்பணி ஒருமுகப்படுத்தியுள்ளது.

பேரா.எமனோ அவர்களின் திராவிட ஒப்புமை மொழியியல் ஆராய்ச்சியில் குறிப்பிடப்படவேண்டியவை. அவர் கோலாமி (Kolami) என்ற மொழிக்கு எழுதிய இலக்கணமும் பேரா. பர்ரோ (T. Burrow) அவர்களுடன் இணைந்து உருவாக்கிய திராவிட வேர்ச்சொல் அகராதியும் (A Dravidian etymological dictionary). மராத்திய மாநிலத்தில் கோலாமி மொழி பேசப்படுகிறது. திராவிட மொழிக் குடும்பத்தில் அம்மொழியின் இடத்தையும் அதனுடைய வட்டார வழக்குகளையும் அமைப்பையும் விவரமாகவும் தெளிவாகவும் விவரித்துள்ளார் என்று எஃப்.பி.ஜெ. குய்ப்பர் (F.B.J.Kuiper) இந்நூலை வரவேற்றுச் சிறப்பாகப் பாராட்டியுள்ளார். கோலாமி என்ற மொழியின் இலக்கண நூலின் வெளியீடு

திராவிட ஒப்புமை மொழியியலில் ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கியுள்ளது என்று பேரா. குய்ப்பர் குறிப்பிடுகிறார். முன்பு குறிப்பிட்டுள்ளபடி ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய பேரா.பர்ரோ அவர்களுடன் இணைந்து திராவிட வேர்ச்சொல் அகராதி உருவானது. இந்த அகராதியில் 19 மொழிகளிலிருந்து வேர்ச்சொல் நிலையில் உறவுடைய 5000 வகைகளின் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. 33,000 திராவிடச் சொற்கள் பதிவாகியுள்ளன. பெங்கோ (Pengo), மண்டா (Manda) ஆகிய மொழிகள் ஆராயப்பட்டு இலக்கணங்கள் வெளியானதும் இம்மொழிகளின் சொற்களையும் தெலுங்கு போன்ற இலக்கிய மொழிகளில் வெளிவந்த செய்திகளையும் உள்ளடக்கி இந்த அகராதி திருத்தப்பட்டு 1984ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

1984ஆம் ஆண்டு வெளிவந்த தோடா இலக்கணமும் பனுவல்களும் (Toda grammer and texts) என்ற நூல் பேரா. எமனோ அவர்களின் இடையறாத வளமான ஆர்வத்தையும் சுயசிந்தனையையும் வெளிப்படுத்துகிறது. இந்நூல் அவருடைய நாற்பது ஆண்டுகளின் களப்பணி மற்றும் அம்மொழியின் புரிதலை வெளிக்காட்டும் சின்னமாக அமைந்துள்ளது. அது இரண்டு பகுதிகளாக வெளிவந்தது. அறிமுகத்தையும் அடைவுகளையும் (indices) தவிர்த்து முதல் பகுதியில் ஒலியனியல், தொடரியல், பெயர் உருபனியல், பதிலிடு பெயர்கள், எண்ணுப்பெயர்கள், பெயரடைகள், வினையடைகள், வினை உருபனியல், இடைச்சொற்கள் முதலானவை விரிவாக விவரிக்கப்பட்டுள்ளன. பகுதி இரண்டில் கருப்பொருள் அடிப்படையிலான பனுவல்களின் வகைகள் கொடுக்கப்பட்டுள்ளன. புராணக் கதைகள், சடங்குகள், குலங்கள், சாவு குறித்த சடங்குகள், காதல் மற்றும் திருமணம், மற்றைய பழங்குடி மக்களோடு தோடா இனத்திற்கு உரிய கதைகள் மற்றும் நாட்டுப்புறவியல் தொடர்பானவை. மொத்தத்தில் 194 பனுவல்களைக் கொண்ட இத்தொகுப்பு அம்மக்களின் மொழி, பண்பாடு, சமூகம் ஆகியவை குறித்து ஏராளமான தகவல்களைத் தன்னகத்தே கொண்டது. எமனோ என்ற அறிஞரிடம் உள்ளார்ந்துள்ள மொழியியலார்-மானிடவியலார்-இந்தியவியலார் என்ற கூறுகளை

இப்பெரும்பணி வெளிக்கொணர்கிறது. இந்தத் துறைகளில் ஆய்வு மேற்கொண்டுள்ள ஆய்வாளர்களுக்கு பேரா. எமனோ அவர்களின் ஆய்வு ஒரு மிகச்சிறந்த முன்னுதாரணமாகத் திகழ்ந்துகொண்டிருக்கிறது. பேரா. எமனோ அவர்கள் பின்பற்றிய முறையியலும் கோட்பாட்டு அடிப்படையிலான நுணுக்க விவரிப்பும் பழங்குடி மக்களின் மொழிகளில் ஆய்வு செய்வோருக்கு மட்டுமின்றிப் பொதுவாக இயற்கை மொழிகளில் ஆய்வு நிகழ்த்தும் அனைவருக்கும் ஒரு முன்மாதிரியாக அமைந்துள்ளது.

1956ஆம் ஆண்டு பேரா. எமனோ அவர்கள் வெளியிட்ட 'இந்தியா ஒரு மொழியியல் பரப்பு' (India as a linguistic area) என்ற கட்டுரை இந்திய மொழியியல் வரலாற்றில் ஒரு திருப்புமுனை என்று நாம் கூறலாம். ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் பேசப்படுகின்ற இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் பொதுவான கூறுகளைக் கொண்டிருக்கும். அவ்வாறு காணப்படும் கூறுகள் ஒரு குறிப்பிட்ட மொழிக்குடும்பத்தை / குடும்பங்களைச் சேர்ந்த வேறு மொழிகளில் காணப்படுவதில்லை. ('... an area which includes languages belonging to more than one family but showing traits in common which are found not belong to the other members of at least one of the families'.) இதனை அடிப்படையாகக் கொண்டு பல இந்தோ-ஆரிய மொழிகளில் காணப்படும் கூறுகள் திராவிட / முண்டா மொழிகளிலிருந்து இம்மொழிகள் பெற்றிருக்கலாம் என்ற கருதுகோளை அவர் முன்வைத்தார். இது ஆசியாவில் பேசப்படும் பல்வேறு மொழிகளுக்கும் விரிவுபடுத்தி ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. ஒலியனியல், உருபனியல், தொடரியல், பொருண்மையியல் ஆகியவற்றின் வளர்ச்சிப் பின்னணியில் பேரா. எமனோ அவர்கள் வரலாற்றுச் செய்திகளுக்கும் சமுதாய மொழியியல் பிரச்சனைகளுக்கும் காட்டிய உணர்வினை நாம் புரிந்துகொள்ளலாம்.

பேரா. எமனோ அவர்களின் ஆய்வு வெளியீடுகள் அவர் கொண்டிருந்த பல்துறை ஆய்வின் பரப்பையும் விரிவையும் நமக்கு உணர்த்தும். மொழியியல், மானிடவியல், நாட்டுப்புறவியல், பதிப்பியல், (textual criticism) பல்வேறு மொழிகளின் அமைப்புகள், இலக்கியங்கள் ஆகியவற்றில் அவர் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார் என்பது இவற்றால் தெளிவாகும்.

பேரா.எமனோ அவர்கள் 2004ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28ஆம் தேதி நூறாண்டு நிறைவெய்தியதை உலகின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள மொழியியலார்கள் மிக்க மகிழ்ச்சியுடன் கொண்டாடினார்கள். பேரா.எமனோ அவர்களுக்கு நூறு ஆண்டுகள் நிறைவுற்றதைப் போற்றும் வகையில் பல்வேறு பல்கலைக்கழகங்களின் மொழியியல் துறைகளும் மொழியியல் சார்ந்த நிறுவனங்களும் அமைப்புகளும் கருத்தரங்குகள் நடத்திச் சிறப்பித்தன. தமிழ்ப் பல்கலைக்கழக மொழியியல் துறை 2004 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 25, 26 ஆகிய தேதிகளில் பேரா.எமனோ அவர்கள் திராவிட மொழியியலுக்கு ஆற்றிய பணிகளைப் பாராட்டும் வகையில் கருத்தரங்கு ஒன்றைச் சிறப்பாக ஏற்பாடு செய்து நடத்தியது. திராவிட மொழியியல் கழகம் ஆந்திராவில் உள்ள வாரங்கல்லில் நடத்திய 32ஆவது அனைத்திந்திய திராவிட மொழியியலார் மாநாட்டில் பேரா.எமனோ அவர்கள் திராவிட மொழியியலில் மேற்கொண்ட ஆய்வுகளைப் போற்றும் வகையில் சிறப்பு அமர்வு ஒன்றைக் கூட்டியது. மைசூரில் உள்ள இந்திய மொழிகளின் மைய நிறுவனமும் 2005ஆம் ஆண்டு சனவரி மாதம் முதல் வாரம் பேரா.எமனோ அவர்களின் ஆய்வுப்பணி குறித்து விரிவான கருத்தரங்கு ஒன்றைச் சிறப்பாக நடத்தியது. 2005ஆம் ஆண்டு சனவரி மாதம் 6ஆம் தேதி முதல் 8ஆம் தேதி வரை உஸ்மானியா பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மையம் இந்திய மொழிகளின் மைய நிறுவனத்துடனும் ஐதராபாத் பல்கலைக் கழகத்துடனும் ஆங்கிலம் மற்றும் அயல்மொழிகளின் நிறுவனத்துடனும் பொட்டி ராமுலு தெலுங்கு பல்கலைக்கழகத்துடனும் தெலுங்கு அகாடமியுடனும் மத்திய இந்தி நிறுவனத்துடனும் இணைந்து 6ஆவது அனைத்துலக தென் ஆசிய மொழிகளின் மாநாட்டில் பேரா.எமனோ அவர்களின் ஆய்வுப் பணிகளைப் பாராட்டும் வகையில் சிறப்பு அமர்வுகள் 8ஆம் தேதி ஏற்பாடு செய்யப்பட்டன.

பேரா.எமனோ அவர்களின் ஆய்வுப்பணிகளில் குறிப்பிடப்பட வேண்டியவை தோடா மொழி, பண்பாடு குறித்த விரிவான ஆய்வுகள். தோடா மொழியில் நாமடி உயிர்கள் (retroflex vowels) உள்ளன என்ற அவரது கண்டுபிடிப்பு திராவிட மொழியியலில் முக்கியமானது. முன்பே

குறிப்பிட்டுள்ளது போல் பேரா. எமனோ அவர்களின் இந்தியா ஒரு மொழியியல் பரப்பு என்ற ஆய்வு திராவிட மொழியியலில் மட்டுமின்றி ஆசிய மொழியியலிலேயே பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. மூலத்திராவிட மொழியில் (proto Dravidian) ஒலிப்பிலாத் தடை (voice-less stops) ஒலியன்கள் மட்டுமின்றி ஒலிப்புடைத் தடை (voiced stops) ஒலியன்களும் இருந்திருக்கலாம் என்ற கருதுகோளை அவர் ஆதரித்தார். அதேபோல் மூலத்திராவிட மொழியில் இருவழித் திணைப்பால் பாகுபாடு இருந்திருக்கலாம் என்ற கருத்தை அவர் கொண்டிருந்தார். இக்கருதுகோள்கள் கால்டுவெல் அவர்களின் கருதுகோள்களுக்கு மாறானவை. சமஸ்கிருத மொழியில் திராவிடச் சொற்கள் என்ற அவ்வுடைய ஆய்வு முக்கியமாகக் குறிப்பிடப்படவேண்டிய ஆய்வுகளுள் ஒன்று. பேரா.எமனோ அவர்கள் 20ஆம் மற்றும் 21 ஆம் நூற்றாண்டுகளில் திராவிட மொழியியலுக்குக் கிடைத்த பெரும் பொக்கிஷம். 102 ஆவது வயது வரை அவர் நம்முடன் வாழ்ந்தது நாம் பெற்ற பெரும்பேறு. இந்த ஆண்டு ஆகஸ்டு மாதம் 30ஆம் தேதி அவர் மறைந்தது திராவிட மொழியியலுக்குப் பேரிழப்பாகும். இந்தியாவில் தலைசிறந்த மொழியியல் அறிஞரான பி.ஹெச். கிருஷ்ணமூர்த்தி அவர்களும் அமெரிக்க மொழியியல் அறிஞரான வில்லியம் பிரைட்டும் (William Bright) பேரா.எமனோ அவர்களின் மாணவர்கள் என்பது குறிப்பிடத்தகுந்தது.

(This Tamil version is based on 'A Bibliography of M.B. Emeneau' published by Profs. B. Ramakrishna Reddy and K. Nagamma Reddy in the International Journal of Dravidian Linguistics, vol. xxxiv.2.2005. pp. 229-55).



# எழுத்துத் தமிழ்

முனைவர் பெ.சுயம்பு
தமிழ் இணைப் பேராசிரியர்
ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்

## *ஆவணப்படுத்துதல்*

உலகில் பல்வேறு மக்கள் இனத்தவர் வாழ்கின்றனர். அவர்கள் வழங்கும் மொழிகளும் பல. இம்மொழிகளுள் பெரும்பாலானவை பேச்சுவழக்கினை மட்டுமே உடையன. பேச்சுவழக்கு மட்டுமே உடைய மொழிகளுள் பல மறைந்துபோயின. அம்மொழிகளின் கட்டமைப்பாகிய இலக்கணத்தையும் மக்களின் வாழ்வியலான இலக்கியங்களையும் ஆவணப்படுத்துகிற எழுத்துவழக்கு இன்மையே இம்மொழி வீழ்ச்சிக்குக் காரணம் எனலாம். ஏனெனில், ஆவணப்படுத்துதல் என்பது மனிதஇனத்தின், மரபு வரலாற்றினை நிலைப்படுத்துகிற அரிய நெறியாக விளங்குகிறது.

## *மொழிகளின் வாழ்வு*

பாரத நாட்டில் ஏறக்குறைய முந்நூறு மொழிகள் உள்ளன என்பது கணக்கு. சில நூறு மாந்தரால் மட்டுமே பேசப்படுகிற மொழிகளின் எண்ணிக்கையே இவற்றினும் மிகுதி. இவை யாவற்றையும் ஆரியம், திராவிடம், ஆஸ்திரோஆசியம், சீனோ-திபெத்தியம் என்னும் நான்கு மொழிக்குடும்பங்களுள் அடக்குவர். இவற்றுள் ஆரிய, திராவிட மொழிகளுள் சில மட்டுமே எழுத்து வடிவங்களைப் பெற்றுள்ளன. பல மொழிகள் வெறும் பேச்சுமொழிகளாகவே வழங்குகின்றன. இப்பேச்சுமொழிகளும் கூட, அவற்றைப் பேசுகிற மக்களின் பெருமைக்குரிய உரிமைகளாகத் திகழவில்லை. அண்டைப் பகுதிகளில் வாழ்கிற மக்களின் எழுத்து மொழியின் வரிவடிவங்களைச் சில மொழிகள் பெற்றுள்ளன. பல மொழிகள் முற்றிலும் பேச்சுவழக்கில் கூடப் புறக்கணிக்கப்பட்டு, அவற்றைப் பேசுதற்குரிய மக்களால் அவமானச் சின்னங்களாகக் கருதப்படுகின்றன. இம்மக்கள் எழுத்து வடிவங்களை உடைய வேற்று மொழியையே தாங்கள் பேசுதற்கும் எழுதுதற்கும் பயன்படுத்தி வருகின்றனர். இத்தகைய போக்கினால் பல மொழிகள் முற்றிலும் அழிந்துவிடும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளன. இதே போக்குக் காரணமாக உலக முழுவதிலும் பலமொழிகள் ஏற்கனவே அழிந்துள்ளன.

இந்திய மொழிகளுள் ஆஸ்திரோ-ஆசியம், சீனோ-திபெத்தியம் இரண்டும் ஏறக்குறைய அந்திக்காலத்தை எய்திவிட்டன எனலாம். ஆங்காங்கே மிகக்குறைந்த எண்ணிக்கையிலான பழங்குடிகளின் நாக்கில் மட்டுமே இவை நொண்டி நடமிட்டுக் கொண்டிருக்கின்றன. ஆரிய மொழிகளிலும் பல இந்த நிலையிலேயே காணப்படுகின்றன. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஒழிந்த திராவிட மொழிகளின் வாழ்வும் அவ்வாறே. இந்நான்கில் மட்டுமே எழுத்து வடிவம் உள்ளதால், இவை செழித்துக் காணப்படுகின்றன. ஏனையவை பழங்குடி மக்களின் பேச்சுமொழிகள். அம்மொழி மக்களுள்ளும் கற்றவரும் நாகரிகத்தவரும் தம் இனத்திற்கு உரிமையுடைய மொழியை வழங்குதலின்றி, அண்டைப் பகுதி மக்களின் மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடத்தில் பேசுவதையே பெருமையாகக் கருதுகின்றனர். இனமொழிகளின் இந்தப் புறக்கணிப்பிற்குப் பல காரணங்கள் உள்ளன. எனினும் எழுத்து வடிவம் இல்லாததே அவற்றுள் முதன்மையான காரணம் எனலாம்.

எழுத்து மொழி அம்மொழி பேசும் மக்களின் வாழ்வியலைப் பெருமைப்படுத்துகிறது. அவர்களது பரம்பரை வாழ்வியற் கூறுகளைப் பாதுகாத்து, வழிவழி வருகிற புதிய தலைமுறையினருக்கு நினைவூட்டிக் கற்பிக்கிறது. அதோடு, அந்த மொழியின் கட்டமைப்பை எந்த ஒரு சூழலும் தாக்கிச் சிதைக்காதவாறு காப்பாற்றவும் செய்கிறது.

## *முகவரி இழப்பு*

மக்களின் வாழ்க்கைச் சூழலை ஒட்டிப் பேச்சொலிகள் அமைகின்றன; ஏற்கெனவே உள்ள ஒலிகளில் மாற்றம் நேரலாம்; எண்ணிக்கை குறையவோ கூடவோ நேரலாம். இத்தகைய ஒலி மாற்றம் அளவுக்கு மீறி அமையும் போது, ஒரு மொழியின் பிறப்பிடம் பற்றிய ஆய்விலும் ஐயம் ஏற்பட்டுவிடுகிறது. திராவிட மொழிகளை ஆரியக் குடும்பத்தைச் சார்ந்தவை என்று முன்னாட்களில் அறிஞர்கள் கூறினர். தமிழ் அல்லாத தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளைக் கூட, அவற்றைப் பேசும் பெரும்பான்மை மக்கள் தங்கள் மொழி ஆரியக்குடும்பத்தைச் சார்ந்தது என்று கூறிக்கொள்வதிலேயே பெருமை கொள்கின்றனர்.

தெலுங்கு, கன்னடம், மலையாளம் மூன்றிலும் தமிழைப் போன்று எழுத்து வழக்கும் உள்ளது. எனினும் இவற்றின் ஒலியமைப்பு தமிழிலிருந்து வேறுபட்டு, ஆரிய மொழிகளை ஒத்துள்ளது. இந்த ஒலி மாற்றமே தமிழிலிருந்து தெலுங்கு முதலிய மொழியினர் தம்மை வேறுபட்டவர் என்று கூறுதற்குக் காரணமாகும். தெலுங்கு, கன்னடம், மலையாளம் மூன்றிலும் பழங்காலத்தில் இலக்கணம் எழுதப்படவில்லை. பேச்சு மொழியில் பரவலாக ஒலிமாற்றம் நிகழ்ந்து நிலைத்ததற்கு நெடுங்காலத்திற்குப் பின்னாலேயே இலக்கண நூல்கள் இம்மொழிகளில் எழுதப்பட்டன. அதனால் க, ச, ட, த, ப, என்னும் ஐந்து வர்க்கங்களிலும் நந்நான்கு ஒலிவகைகள் உள்ளன என்ற நிலை அமைந்தது. ஸ, ஹ, க்ஷ, ஷ என்னும் ஒலிகளும் இம்மொழிகளுக்கு உரிமையானவை என்ற கருத்து எழுந்தது. இவை தவிர, உயிரொலிகளின் பட்டியலிலும் வடவாரிய மொழிகளின் பட்டியலை ஒட்டிய ஒலி ஆக்கத்தை மொழி அறிஞர்கள் உருவாக்கலாயினர். அவ்வாறே சொல், தொடர் இலக்கணங்களிலும் வடமொழியின் ஆதிக்கத்தை ஏனைய திராவிட மொழியறிஞர்கள் - குறிப்பாக இலக்கண அறிஞர்கள் தாராளமாக ஏற்கலாயினர். தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்னும் மொழிகளின் இலக்கண நூல்கள் வடமொழி ஆதிக்கம் நிறைந்து காணப்படுதற்கு இதுவே காரணமாகும்.

ஒரு மொழியின் வரலாற்றில் ஒலி பற்றிய கொள்கை மிக முதன்மையானது. ஒலிகளில் தாராளமாக மாறுதலை ஏற்குமாயின் அம்மொழி தன் முக அடையாளத்தையே முற்றிலும் இழந்துவிடும் தீங்கிற்கு ஆளாக நேரிடும். தமிழ் ஒழிந்த திராவிட மொழிகள் தமது குடும்ப முகவரியைத் தொலைத்ததற்கு இந்தத் தாராள ஒலிமாற்றக் கொள்கை அல்லது எண்ணமே அடிப்படையாகும். எனவே ஒலிமாற்றத்தை மொழி வாழ்வைத் தொலைத்திடா வகையில் தடுத்தாக வேண்டும்.

## *இலக்கணச் சான்றாதாரம்*

பேச்சுமொழியில் ஒரு மொழி பேசுவோர்களிடையே மனிதர்க்கு மனிதர் ஒலியில் வேறுபாடு காணப்படுதல் இயல்பாகும். அம்மனிதரது பேச்சுறுப்பு, அவரது பேசும் ஆற்றல், வாழ்க்கைச் சூழலை ஒட்டி உணர்ச்சி வேறுபாட்டை ஒட்டி இவ்வேறுபாடு நிகழ்கிறது. எனவே இப்பேச்சு மொழியில் ஒலிமாற்றத்தை முழுமையாகத் தடை செய்தல்

அரிது. ஆனால் எழுத்துமொழியால் இதனைச் செய்யவியலும். எழுத்துமொழி வழக்கைப் பேச்சுமொழியில் வலியுறுத்துவதன் வாயிலாக இது நேர்த்தியாகும். பேசுவதைப் போன்று எழுத முயல்வது எளிது. ஏனெனில் பேச்சுமொழி இயற்கையானது. எழுதுவதைப் போன்று பேசுவது கடினமான ஒன்று. எழுத்து மொழி செயற்கையானது. ஆனால் பேசுவது முற்றிலும் வேறுபடும் போது எழுத்து மொழியைச் செம்மைப்படுத்துவது என்பது மிகக் கடினமான செயலாகிவிடும். எனவே எழுத்து மொழியையும் பேச்சுமொழியையும் இணைகோடுகளில் ஒருங்கிணைத்துச் செல்லுதல் மொழிப் பாதுகாப்பில் இன்றியமையாத-தவிர்க்கவியலாத செயலாகும்.

கற்றறிந்த சான்றோர்கள் தம் மொழியமைப்பினைச் சிதைவின்றிப் பேணும் பொருட்டுப் பேச்சுமொழியையும் எழுத்து மொழியையும் வேறுபாடின்றிக் கையாண்டனர். எனவே அவர்களது மொழிவழக்கே ஒரு மொழியின் அமைப்பிற்குச் சட்டமாக - இலக்கணமாக ஏற்கப்பட்டது.

*வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே*
*நிகழ்ச்சி அவர்கட்கு ஆக லான* (தொல்காப்பியம்)

மனித வாழ்விற்கு வழிகாட்டியாக ஏற்கப்பட்டுள்ள வாழ்க்கை சான்றோர்களுக்கு உரியது. அவ்வாறே மொழியின் அமைப்பிற்கும் சான்றோரது மொழியே சட்டமாக ஏற்கப்படுகிறது. இம்மொழி அமைப்பினைத் திரித்து வழங்கினால் மொழி மரபு சிதையும்; முகவரி தடுமாற்றமடையும்.

*மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்*

என்று இதனையே தொல்காப்பியம் மரபியலில் குறிப்பிடுகிறது.

சான்றோர் வழங்குகிற மொழி அமைப்பே திரிபில்லாதது; மரபு திரியாதது. ஆதலின் மரபிலக்கண நூல்களின் சான்றாதாரமாக அவர்களது மொழிவழக்கே ஏற்கப் பெறுகிறது.

தமிழ்மொழி சிதைவு நேரிடா வண்ணம் பேணப்பட்டு வருகிறது. இந்தப் பாதுகாப்பு உணர்வு மிக நெடுங்காலமாகவே தமிழர்களிடம் காணப்படுகிறது. தொல்காப்பியம் தொன்மையான மரபிலக்கணநூல். எனினும் அது இயற்றப்படுதற்கு முன்னரும் பல மரபிலக்கண நூல்கள் வழக்கில் இருந்தன. இதனைத் தொல்காப்பியத்தில் முந்நூற்றிருபதுக்கு

மேற்பட்ட நூற்பாக்களில் காணலாம். இந்த நீண்ட இலக்கணமரபு தமிழ் மக்களிடம் அயல்மொழிகளின் கலப்பினால் தம் மொழிக்குச் சிதைவு நேரிடலாம் என்ற அச்சவுணர்வு மிக நெடுங்காலத்திற்கு முன்னரே இருந்தது என்பதனைத் தெரிவிக்கிறது.

எழுத்துமொழி ஒரு மொழியின் அரணாக விளங்குகிறது. அதிலும் ஒலி, தொடரமைப்பு எனும் இரண்டும் அரணின் பகுதிகளாகக் காணப்படுகின்றன. தவிர, இவ்விரண்டும் ஒன்றனோடு மற்றொன்று நெருக்கம் உடையதாகவும் உள்ளது. ஒலி என்று கூறப்படுகிற எழுத்தின் ஓசை தனிநிலையில் எழுத்து நிலையில் திரிவடைதல் பெரும்பான்மையும் இல்லை. ஆனால் தொடரமைப்பிலும் தொடரின் உறுப்பாகிய சொல்லமைப்பிலும் இடம்பெறும் போது எழுத்துத் தனது முந்தைய-தொன்மையான ஒலியியல்பிலிருந்து மாறுதற்கு வாய்ப்பு அமைகிறது.

தமிழ் வல்லெழுத்துக்கள் ஒலிப்பில்லாத தடையொலிகள். இவை இரு உயிர்களுக்கு இடையில் வரும்போது உரசொலிகளாகின்றன; இனமெல்லினத்தை அடுத்து வரும் போது ஒலிப்புடைய ஒலிகளாகின்றன. சொல் முதலிலும் இரட்டித்தும் வரும்போது ஒலிப்பில்லாத ஒலிகளாகின்றன.

| | | |
|---|---|---|
| எ-டு | பகல் (Paxal) | அரசு (Arasu) |
| | தங்கம் (Tangam) | மஞ்சள் (Manjal) |
| | கலை (Kalai) | பச்சை (Paccai) |

ககரத்திற்கு x, g, k, d என்றும் சகரத்திற்கு s, j, c என்றும் மூன்று மூன்று ஒலிகள் உள்ளன. இவற்றுள் k,c, என்பனவே தமிழின் உரிமையான தொன்மையான ஒலி. இவ்வொலிகள் சொல்லில் வரும்போது அருகிலுள்ள பிற ஒலிகளுக்கு ஏற்ப மாறுகின்றன. இம்மாற்றம் பேசுவோரின் ஒலிப்புத் திறத்தை ஒட்டியும் நிகழ்வதுண்டு.

ஒன்றுக்கு மேற்பட்ட ஒலிகள் ஓர் எழுத்திற்குப் பேச்சுமொழியில் இருந்தாலும், எழுத்து மொழியில் ஒரே வடிவமே ஏற்கப்பட்டுள்ளது. எனினும் இதனைத் தொடரில் எழுதும் போதும் எழுதியதைப் படிக்கும்போதும் ஒலிப்பில் குழப்பம் காணப்படலாம். ஒலிக்கும் முறையைத் தெளிவாக உணராத நிலையில் இச்சிக்கல் ஏற்படுகிறது. இதனைத் தவிர்க்கத் தவறும்போது, தனிஎழுத்தை ஒலிப்பதிலும் தவறுகளைச் செய்யும் வாய்ப்பு நேரிடுகிறது.

தமிழ் ஒலிகளைச் சிதைவின்றி ஒலிக்கவேண்டும் என்ற நோக்கமே சொற்கள் நெருங்கித் தொடராகும் போது புணர்ச்சி விதிகளைத் தமிழ் இலக்கணங்கள் உருவாக்கியுள்ளன. வல்லெழுத்து மிகும் என்னும் புணர்ச்சிவிதி தமிழ் வல்லின எழுத்துக்கள் ஒலிப்பில்லாத தடையொலிகள் என்பதைச் சுட்டிக்கூறி, அறிவுறுத்தும் நோக்கில் உருவாக்கப்பட்டதே.

உயிரிறுதியை அடுத்து ஏற்படும் சிறிதுகால இடைவெளியால் வருகிற வல்லெழுத்தின்ஒலி தளர்வு அடையலாம். எனவே இச்சூழலில் வல்லெழுத்து மிகும் என்பது பொதுவான விதி.

*இயல்பினும் விதியினும் நின்ற*
*உயிர்முன் வலிமிகும்* (நன்னூல்)

இவ்விதி சிக்கலற்ற பொதுவிதி; முதற்கட்டத்தில் வரையறுக்கப்பட்ட விதி.

நாளடைவில் சான்றோர் சிலரிடம் அமைந்த நெகிழ் உணர்வு காரணமாக இவ்விதியிலும் தளர்வு ஏற்பட்டது. கிளிச்சிறியது, கிளி சிறியது என வல்லெழுத்தை மிகுத்தும் மிகாதும் எழுதலாம் என்ற உறழ்வு விதி உருவாக்கப்பட்டது. இதற்கு அவர்களின் ஒலிப்பில் ஏற்பட்ட ஒலிமாற்ற உறழ்ச்சியே காரணம். கிளிச்சிறியது என்பதில் சகரம் ஒலிப்பில்லாத தடையொலி; கிளி சிறியது என்பதில் சகரம் உரசொலி.

மூன்றாவது விதி உருவானபோது ஒலிப்பில் நெகிழ்வு வலிமை பெற்றுவிட்டது. கிளி சிறியது, ஒலி கேட்டது என்றெல்லாம் வல்லெழுத்து மிகாமல் எழுதவேண்டும் என்பது விதி ஆகிவிட்டது.

இலக்கண விதிகளை அமைக்கும்போது மொழி அமைப்பை மட்டும் கருத்தில் கொண்ட நிலை முதலாவது விதியைச் சார்ந்தது. ஏனையவை மொழியை வழங்குகிற சான்றோர்களிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடு அல்லது நெகிழ்வு காரணமாக அமைந்தவையாகும். இந்த நெகிழ்வு வரையறையின்றிக் கட்டவிழ்ந்து போகும் போது மொழியின் ஒலியமைப்பில் பெருஞ்சிதைவைக் காணநேரிடும்.

மிகுந்த கட்டுப்பாடு வளர்ச்சிக்குத் தடை; நெகிழ்வு வளர்ச்சிக்கு அரண் என்ற கொள்கை காரணமாகவே தமிழ் எழுத்து மொழியில் முரண்பட்டதும் தெளிவற்றதுமான புணர்ச்சி விதிகள் காணப்படுகின்றன. இக்குழப்பத்தைச் சரிக்கட்டும் நோக்கில் வேற்றுமைப் புணர்ச்சி,

வேற்றுமை அல்வழிப் புணர்ச்சி என்று தொடர்ப்பொருள் அடிப்படையில் புதியவிளக்கம் பின்னாளில் தரப்படலாயிற்று.

தற்காலத் தமிழின் நிலை - குறிப்பாக எழுத்துத் தமிழின் நிலை மிகவும் உயிரற்றதாகக் காணப்படுகிறது. ஐயமறக்கற்ற அறிஞர்கள் பழைய இலக்கண மரபை ஏற்று எழுதுகின்றனர். அவர்களுள்ளும் சிலர் நெகிழ்வுப் போக்குக் காரணமாக பழைய மரபைப் புறக்கணித்து எழுதுகின்றனர். மொழிப் புலமை இல்லாதவர் இலக்கண விதிகளைப் பற்றிய எண்ணமின்றிச் சதுராடுகின்றனர். இதழ்களின் எழுத்துமொழி பழந்தமிழ் மரபு பற்றிய எண்ணத்திற்கு முதலிடம் தருவது இல்லை. இதழ்களும் மொழிப்பயிற்சி இல்லாதவரும் எழுத்துப் படைப்புக்களைப் பேரளவில் உருவாக்கிட, அவற்றைப் பெரும்பான்மையாக மாணவரும் ஏனையோரும் பயிலுகின்றனர். பயிலுவோரின் எழுத்து மொழியில் அவர்கள் கற்ற படைப்புக்களின் தாக்கம் பேரளவில் படர்கிறது. தவிர, அவர்களின் பேச்சு மொழியும் எழுத்துக்களை ஒலிக்கும் முறையும் கூட, செம்மையாக இல்லை. இத்தகைய ஒலிப்பு முறையும் எழுத்து மொழியைப் பெரிதும் பாதிக்கிறது.

தற்காலத் தமிழில் எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் செம்மை சிதைந்துள்ளது. ங, ஞ, ண, ந, ன, ல, ழ, ள, ற என்னும் ஒலிகள் பலரால் திருத்தமாக ஒலிக்கப்படுதல் இல்லை. கல்வித்துறை, தொடர்பியல் துறை என்று எல்லாத் துறையினரிடமும் இக்குறை காணப்படுகிறது. எழுத்து மொழியின் நிலையும் அவ்வாறே. ண, ன, ந மூன்றிற்குமிடையே மயக்கம்; ல, ழ, ள மூன்றிலும் மயக்கம்; ர, ற இரண்டிற்குமிடையே மயக்கம்.

ஒரு மொழியின் பாதுகாப்பு அரண் எழுத்து வழக்கு. தமிழைப் பொறுத்தவரையில் எழுத்துத்தமிழும் பாதுகாப்பிற்குக் கேடாக இன்று உள்ளது. எனவே சான்றோர்கள் இது குறித்து எண்ணித் திட்டமிடுதல் வேண்டும். யாவரும் ஒருமித்த சில மொழியமைப்பு விதிகளை உருவாக்குதல் வேண்டும். அவை கட்டாயமாகக் கல்வித்துறையிலும் தொடர்பியல் துறையிலும் அச்சுத்துறையிலும் பின்பற்றியாக வேண்டும்; சட்டமாக்கப்படவேண்டும். தமிழர்களும் முழுமனத்தோடு ஏற்று வழங்கவேண்டும்.

# சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள்

முனைவர் சுந்தரி சிவக்கண்ணன்
இணைப் பேராசிரியர்
செந்தமிழ்க் கல்லூரி, மதுரை-1.

## *உரையாடல்*

தோழி, தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவியிடம் பேசத் தொடங்க, தலைமகள் கூறுவதாக வரும் அகநானூற்றுப் பாடல் 260- நெய்தல் திணை - (மோசிகீரனார்) மோசிக்கரையனார்.

"மண்டிலம் மழுக, மலைநிறம் கிளர,
வண்டினம் மலர்பாய்ந்து ஊத, மீமிசைக்
கண்டற்கானல் குருகினம் ஒலிப்ப,
திரைபாடு அவிய, திமில் தொழில் மறப்ப,
கரைஆடு அலவன் அளைவயின் செறிய
செக்கர் தோன்ற, துணைபுணர் அன்றில்
எக்கர் பெண்ணை அகமடல் சேர
கழிமலர் கமழ்முகம் கரப்ப, பொழில் மனைப்
புன்னை நறுவீ பொன்நிறம் கொளாஅ,
எல்லை பைப்பயக் கழிப்பி, எல்உற
யாங்கு ஆகுவல் யானே? நீங்காது,
முதுமரத்து உறையும் முரவுவாய் முதுபுள்
கதுமெனக் குழறும் கழுதுவழங்கு அரைநாள்,
நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த
அன்பிலாளன் அறிவு நயந்தேனே"

இரவுக்குறிக்கண் தலைமகள் சிறைப்புறமாகத் தோழியால் சொல் எடுக்கப்பட்டு, தலைமகள் சொல்லியது.

பகற்பொழுது மாற, இரவுப் பொழுது வந்தது ; இவள் எந்நிலையினை அடைவாளோ-என்று தோழி உரைக்க, அவளுக்கு மறுமொழியாகத் தலைவி குறுக்கிட்டு உரைக்கிறாள்.

தன் துன்பத்திற்குக் காரணம் அன்பிலாத தலைவனுடைய சொற்களைத் தன் அறிவு நயந்தமையே என்றும், தான் எய்தும்

துன்பத்திற்குத் தோழியும் வருந்தி நிற்கின்றாள் என்று தலைவனும் உணருமாறு உரைக்கிறாள். இருவரும் துன்புறுவதற்குப் பாதி இரவில் தலைவன் வருதலே காரணம் என்றும், இரவில் வருதலைத் தவிர்த்து, வரைதல் நாட்டமுடைய அன்புடையனாய் தலைவன் மாறவேண்டும் என்றும் தலைவி, தோழி இருவரும் விரும்புவதை எடுத்துரைப்பதாக இப்பாடலில் உரையாடல் அமைகிறது.

கணவன் வெளியூருக்குச் சென்றபோது அவனுடைய வரவை எதிர்பார்த்து ஏங்குதல் அன்புடைய மனைவியர் யாவர்க்கும் அனுபவமான ஒன்றே. ஆயினும் ஒரு சில புலவர்கள் அந்த அனுபவத்தைப் பாட்டுவடிவில் அழகுறப் படைத்துத் தந்துள்ளனர். தலைவி ஒருத்தி தான் வளர்த்த பைங்கிளியை முன்கையில் ஏந்திக் கொண்டு, வீட்டார் யாரும் அறியாதபடி அதனோடு மெல்லப் பேசுகின்றாளாம்; தலைவர் இன்று வருவார் என்று சொல்; கிளியே! அவரைப் பற்றிச் சொல்" என்று மெல்லச் சொல்கின்றாளாம்.

*'செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி*<br>*'இன்று வரல் உரைமோ, சென்றிசினோர் திறத்தென*<br>*இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென*<br>*மழலை இன்சொல் பயிற்றும்*<br>*நாணுடை அரிவை'*

இவ்வாறு பாடியுள்ளார் மதுரை மருதன் இள நாகனார் என்ற புலவர் (அகநானூறு 34, வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது) இப்பாடலில் தலைவி யாருக்கும் தெரியாமல் மழலை பேசும் தன் வளர்ப்புப் பிள்ளையாகிய கிளியிடம் இரகசியமாக உரையாடுகிறாள்.

ஒரு கூற்றாகவே மாந்தர் உணர்ச்சியைப் புலப்படுத்தவேண்டும் என்னும் வரையறையை ஒட்டியே அகப்பாடல்கள் எழுந்தன. இக்கட்டுப்பாட்டை அல்லது மரபை ஓரளவு கலித்தொகை மாற்றுகின்றது. இருவர் பேசும் இயைபுள்ள உரையாடற் காட்சி கலித்தொகையில் இடம்பெறுகின்றது. தலைவனோடு சொல்லெதிர் சாற்றும் அளவிற்கு உயர்ந்த தலைவியை இங்குக் காணலாம். தலைவனின் விருப்பத்தை இயல்பாகத் தவிர்க்கும் தலைவியின் பேச்சுடன் பாட்டுத் தொடங்குகிறது. விருப்பமில்லாதாரைக் கைப்பற்ற விரும்பாதே என்கிறாள். அதெல்லாம்

ஏதும் அறியேன் ; இனியள் என்பதால் நாடினேன் என்கிறான் தலைவன். நமக்கு இனிது என்பதால் பிறர்க்கு இன்னல் செய்வது இன்பம் தருமோ என வினவுகின்றாள் தலைவி. தண்ணீர் உண்ணுவார்க்கு இன்பம் தருவதால் தான் உண்ணுகின்றனர் ; தண்ணீர்க்கு இனிமை தரும் என்பதற்காக அன்று என்றுகூறி, அதுவே அறமும் ஆகும் என்கிறான். நெஞ்சம் கவர்ந்தவளை வலிதில் சேர்தல் மணநூல் அறம் எனத் தலைவன் உரைத்தலும், மறுக்க இயலாமல் உடன்படுகிறாள் தலைவி. அந்த உடன்பாட்டை தலைவனுக்கு உரைக்கும் பேச்சாக அமைக்காமல் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைத்துள்ளமை சிறந்த நாடகத் திறனாகும்.

(குறிஞ்சிக்கலி, 26, - கலித்தொகை, 62 கபிலர்)

(ஏ.எ.இ. தொத்தன் நாணிலன் தன்னொடு)

*சுவை*

தாம் மிகவும் நேசித்த ஒருவர் மறைந்த பிறகு, அவர் வாழ்ந்த இடத்தையும் பயன்படுத்திய பொருள்களையும் பார்க்கும் போது, இழப்பின் துயரம் ஊற்றாகப் பெருகும். அந்த அவலச் சுவையைப் பின்வரும் பாடல்கள் சுட்டுகின்றன. அத்துடன் இப்பாடல்களைப் படிப்பவர் மனக்கண் முன்னே, அந்தப் பொருள்களையும் காட்சி வடிவாக்குகின்றன.

பறம்பு மலையை நிலவின் ஒளிப் போர்வையில் காணும் பாரிமகளிர்க்கு, முந்தைய முழுநிலவு நாள் நினைவுக்கு வருகிறது. அன்று தங்கள் மனம் இருந்த நிலையையும், தங்கள் தந்தை பாரி போரில் மாய்ந்திட்ட பின்னர் இப்போது குன்றின் மீது நின்று அந்த நிலவின் பொழிவினைக் காணும் போது ஏற்பட்ட உணர்வினையும் பாடலாக வெளிப்படுத்துகின்றனர். இழப்பினை உணர்ந்த ஒவ்வோர் நெஞ்சமும், பாரிமகளிரின் துயரத்திலும் பங்கு கொள்ளவே செய்யும்.

*“அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்*
*எந்தையும் உடையேம் ; எம்குன்றும் பிறர் கொள்ளார்*
*இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில்*
*வென்று எறிமுரசின் வேந்தர் எம்*
*குன்றும் கொண்டார் ; யாம் எந்தையும் இலமே”*

- புறநானூறு - 112

பாரியின் பண்பில் தோய்ந்து நட்புப் பாராட்டிய கபிலர்க்கும் பறம்பு மலையை விட்டு நீங்கும் போது சொல்லொணாத துயரம்

பெருக்கெடுக்கிறது. தம்மோடு பாரியின் செல்வமகளிரையும் அழைத்துச் செல்லவேண்டிய இக்கட்டான சூழலில் உள்ள அவருக்குப் பெருமைக்குரிய பறம்பு மலையைப் பிரிந்து செல்வது தாங்கொணாத் துன்பத்தைத் தருகிறது. மலையைப் பார்க்கும் போது பாரியுடன் அப்பறம்பில் தாம் கழித்த இனிய நாட்கள் நினைவுக்கு வருகின்றன. அம்மலையின் பெருமை, பிரியும் போது மிகுதியாகவே அவருக்குப் புலப்படுகிறது.

பாடலைப் படிப்போர் முன்னே பறம்பு மலையைக் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார், கபிலர்.

*"ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும் ; சிறுவரை*
*சென்று நின்றோர்க்கும் தோன்றும் ; மன்ற*
*களிறு மென்று இட்ட கவளம் போல,*
*நறவுப் பிழிந்திட்ட கோதுடைச் சிதறல்*
*வார் அசும்பு ஒழுகும் முன்றில்*
*தேர் வீசு இருக்கை, நெடியோன் குன்றே"* (புறம்-114)

சங்க இலக்கியம் கருத்துக்களினால் மட்டுமின்றி, கருத்துக்களை வெளிப்படுத்தும் முறையினாலும் சிறப்புற்று விளங்குகிறது. அகம், புறம் ஆகிய இருவகைப் பாடல்களுக்கும் வகுக்கப்பட்டுள்ள திணை, துறை போன்றவை கருத்துக் கூறுகின்றவரை ஒரு கட்டமைப்புக்குள் கொண்டுவருகிறது.

தனிமனிதன் கூறுகின்ற உலகப் பொதுத்தத்துவமாயினும், அது கூறப்படுவது ஒரு பேரவையினரை நோக்கித்தான் என்பது புலப்படுகிறது. அதேபோன்று மாந்தர் கூற்று சூழமைவுக்கு ஏற்ப அமைகின்றது. அவர் கூற்றுக்கள் முன்னே நிகழ்ந்தவற்றையும், இனி நிகழ இருப்பவையையும் சுட்டிக்காட்டுவதாக அமைகின்றன. இக்கூற்றுக்களின் வாயிலாக ஒன்பான் சுவைகளும் வெளிப்படுகின்றன. களம், மாந்தர் கூற்று என அமைந்துள்ள சங்கப்பாடல்களில், குறிப்பாக எட்டுத்தொகைப் பாடல்களில் அமைந்துள்ள நாடகக் கூறுகள் மேற்கூறிய பாடல் செய்திகளால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவை ஒரு சிறு கூறே, எனலாம். 'சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள் என்னும் தலைப்பு ஆழ்ந்த, கூர்மையான ஆய்விற்குரியது.'



# பெண்கள் முன்னேற்றத்தில் ஜுவாவின் பங்கு

எம். பேபி
தமிழ் விரிவுரையாளர்
வந்தவாசி

சமுதாய வளர்ச்சி குன்றிக்கிடந்தக் காலக்கட்டங்களில் சமுதாய முன்னேற்றத்திற்காகப் பல கவிஞர்கள் உழைத்தனர். அவர்கள் சமுதாயச் சீர்கேடுகளை மக்களுக்கு உணர்த்தி மக்கள் முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாய் இருந்தவைகளைப் பற்றி எடுத்துக்கூறினார்கள். அப்பெருந்தடைகளில் ஒன்று பெண்கள் வளர்ச்சிபெறாமையே ஆகும். பா.ஜீவானந்தம் தாம் வாழ்ந்த காலக்கட்டங்களில் பெண்கள் முன்னேற்றத்திற்காகப் பெரிதும் உழைத்து அதில் வெற்றியும் கண்டவர்.

## *சமுதாயமும் பெண்களும்*

சமுதாயத்தின் இன்றியமையாத நிறுவனமாக அமைவது குடும்பம் ஆகும். ஒவ்வொரு குடும்பமும் வளர்ச்சியடைந்தால் தான் சமுதாயம் வளர்ச்சிப் பெறுகிறது. குடும்பம் என்னும் அமைப்பு குடும்பத்தின் தலைவன் - தலைவி என்னும் இருவரின் அன்புறவையே மூலக்கருவாகக் கொண்டு வளர்கிறது. இது தலைவன் தலைவி அவர்கள் வழி குழந்தைகளுமாய் வளர்ச்சி பெறுகிறது. எனவே சமுதாய வளர்ச்சிக்கும், ஒருமைப்பாட்டிற்கும் பெரும்பங்கு வகிப்பது குடும்ப ஒற்றுமையாகும்.

## *குடும்பத் தலைவி*

குடும்பத்தில் தலைவியாக விளங்குபவள் பெண். குடும்பத்தைக் கட்டியெழுப்புதலில் பெண் முக்கியப் பங்கு பெறுகிறாள். "புத்தியுள்ள பெண் தன் வீட்டைக் கட்டுகிறாள்" என்கிறது பரிசுத்த வேதாகமம். நல்ல குழந்தைகளை உருவாக்குவதிலும் அவள் முக்கியத்துவம் பெறுகிறாள்.

## *பெண்மை-தாய்மை-இறைமை*

"பெண்மை என்பது அடக்கம், பொறுமை, தியாகம், இரக்கம், அழகு, தொண்டு, ஒப்புரவு முதலியன அமைந்த ஒன்று" என்பது திரு.வி.க. கருத்து. இத்தகைய குணங்களைப் பெற்று வாழ்வதோடு மட்டுமல்லாமல் உலகாக்கும் தாய்மையாகவும் இந்தத் தாய்மைக் குணத்தால் இறைமைத் தன்மை பெற்று பெண்மைக்கு என்றும் அழியாப்புகழ் சேர்ப்பவளாகவும் பெண் என்பவள் திகழ்கிறாள்.

### ஆணுக்கு நிகராக விளங்கிய பெண்கள்

வேதக்காலத்தில் பெண்கள் ஆணுக்கு நிகராகக் கல்வியிலும் வேதப்பயிற்சியிலும் சிறந்து விளங்கினார்கள். 'ஒத்தகல்வி' என்ற குறிப்பால் சங்ககாலப் பெண்கல்வி சிறப்புப் பெற்றிருந்ததை அறிய முடிகிறது. காக்கைப்பாடினியார், வெள்ளிவீதியார், ஔவையார், பெருங்கோப்பெண்டு, பாரிமகளிர், ஆதிமந்தி போன்ற பல பெண்பாற் புலவர்கள் கல்வியில் சிறந்து கவிஞர்களாகவும் அஞ்சாநெஞ்சம் உடையவர்களாகவும் விளங்கியதைச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. நாயன்மார் ஆழ்வார்களின் காலத்திலும் பெண்கள் சிறந்து விளங்கியதை காரைக்கால் அம்மையார், ஆண்டாள் போன்றோர்களால் அறியமுடிகிறது.

### அடிமைத்தனத்தின் தோற்றம்

சிறந்த ஆற்றல் பெற்றிருந்த பெண்கள் கி.பி. 17, 18ம் நூற்றாண்டுகளில் அடிமைத்தனத்திற்கு உள்ளானார்கள். இந்நிலைமை கி.பி. 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதிவரைத் தொடர்ந்தது. பெண்களை அடிமைப்படுத்த நினைத்தவர்கள் முதலில் பெண்கல்வியைத் தடை செய்தனர். "ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை" என்ற எண்ணத்தைப் பரப்பினர். இத்தன்மையால் பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டது. பெண்கள் இருட்டறையில் அடைக்கப்பட்டனர். இதற்குக் காரணமாக விளங்கியவர்கள் ஆண்கள் ஆவர். "பெண்களை விலங்காக்கித் தங்கள் வழியில் ஆட்ட வேண்டுமென்று ஆண்மக்கள் கொண்ட தீயஎண்ணமே காரணம்" என்று திரு.வி.க. குறிப்பிடுகிறார்.

### பெண்ணடிமை

பெண்ணை ஓர் அடிமைப் பொருளாக கருதுவதிலே ஆண்கள் பெருமைப்பட்டனர். பெண்ணை வெறும் இன்பப் பொருளாகவும், கூலி கேட்காத வேலைக்காரியாகவும், குழந்தை பெறும் இயந்திரமாகவும் நினைத்து நடத்தினர். பெண்ணைப் பெண்ணாக நடத்துவோரின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே காணப்பட்டது. பெண் பிறந்தாலே வெறுக்கத் தொடங்கினர். பெற்றோர் விற்கவும், மற்றோர் வாங்கவும் பெண் ஒரு சந்தைப் பொருள் ஆனாள். திருமணத்திற்கு முன் பெற்றோரும், திருமணத்திற்குப் பின் கணவனும் இறுதிக்காலத்தில் பிள்ளைகளும் பெண்களை அடிமைப்படுத்தினார்கள்.

"இந்திரன் கெட்டதும் பெண்ணாலே; சந்திரன் கெட்டதும் பெண்ணாலே" என்று பேசி மேலும் பெண்களை இழிவுப்படுத்தினர். கோவிலிலே ஆண்டவனைப் பார்க்கும் போது மட்டும் ஆண்பாதி பெண்பாதி என்று அழகாகக் கும்பிட்டுவிட்டு வீட்டில் வந்தால் 'ஆணே நீதி' என்ற நிலை தான் ஏற்பட்டது. பெண்கள் அடைந்த துன்பத்திற்கு ஆறுதலடைய முடியாதவராய் ஜீவா,

"பாரத நாட்டில் பெண்கள் பாடு சொல்லின் நொந்த புண்கள்
தாழ்வடைந்தோமே தூய
ராவுடைந்தோமே" - என்று வேதனை பொங்கக் கூறுகிறார்.

பெண்ணை ஒரு தீய சக்தியைப் போல் அடக்குவதும் ஒடுக்குவதும் அவளிடமிருந்து பணிவிடைகளைப் பெறுவதும் ஓர் ஆடவனின் திறமை என்று எண்ணப்பட்டது. ஆண்வலியவன், ஆளுபவன், பெண் மெலியவள், அடங்குவதற்குரியவள் என்று எண்ணினர். மேலும் பெண்ணானவள் ஆண்களைச் சார்ந்தே வாழமுடியும் என்கிற கருத்தும் ஆணித்தரமாகக் கூறப்பட்டு வந்தது. இக்கருத்தை ஜீவா,

"உண்டி சுருங்குவது
பெண்டிற் கழ கென்று பின்
கண்டபடி புசித்தார் - கிளியே
கடைகெட்ட ஆடவர் தான்"

"சாண் பிள்ளையானாலும்
ஆண்பிள்ளை யென்னும் ஜம்பம்"

என்கிற பாடல் வரிகளின் வாயிலாகப் புலப்படுத்துகிறார்.

"பெண்ணறிவென்பது பேதமைத்து" என்ற உணர்வே சமுதாயத்தில் இருந்தது. இதனால் பெண்களை எந்தச் செயலிலும் ஈடுபடச் செய்யாமல் ஆண்களே எல்லாம் செய்துவந்தனர். பெண்களுக்குப் பேசும் உரிமையும் மறுக்கப்பட்டது. இதைத்தான் ஜீவா,

"பெண்களுக்கொன்றுமில்லை
பேச உரிமை இல்லை
மண்மிசைப் பெண் பிறப்பு - கிளியே
மண் பிறப்பாச்சுதடி"

என்று பாடுகிறார். மேலும் பெண்கள் வாய்திறந்து பேசினால் அவர்கள் கற்பு போகுமென்று ஆண்கள் குறைகூறினர். இதை ஜீவா,

*"பேசிடில் தெய்வக் கற்பு*
*பிசகு மென்றே மிரட்டி"*

என்ற வரிகள் மூலம் புலப்படுத்துகிறார். சங்க காலத்தில் சிறப்பாக வாழ்ந்த பெண்கள் பின்னர் ஆண்களின் கட்டுப்பாட்டிற்குள்ளேயே இருந்தனர். இதைத்தான் ஜீவா,

*"பெண்ணெனக் கூறிவிட்டால்*
*பேயுமிரங்கு மென்பார்*
*கண்ணற்ற ஆடவரால் - கிளியே*
*கட்டுண்டு பெண்கள் நைந்தார்"*

என்று பாடுகிறார். பெண்களை வெளியே போகவிடாமல் வீட்டிற்குள்ளேயே பூட்டிவைத்தனர். இதை ஜீவா,

*"காட்டுக் கரடி, நகை*
*கைதி போல் கன்னியரை*
*வீட்டிலே பூட்டி வைத்தார்"*

என்று பாடுகிறார். இவ்வாறெல்லாம் பெண்கள் அடிமைப்படக்காரணம் பெண்கள் உரிமைகள் மறுக்கப்படல், கல்வியின்மை, பேச்சுரிமையின்மை, சொத்துரிமையின்மை, கொத்தடிமைகள், ஆண்களின் கட்டுப்பாடு, ஆண் ஆதிக்கம், வரதட்சிணைக் கொடுமை, குழந்தை மணம், விதவையர் கொடுமை, கற்புப் பறிக்கப்படல் போன்றவையே ஆகும் என்கிறார் ஜீவா.

### *பெண்கள் விழிப்படைதல்*

ஆண்களால் எல்லா நிலையிலும் பின்னுக்குத் தள்ளப்பட்ட பெண்கள் தன் வாழ்க்கையில் எது நடந்தாலும் "இது என்விதி" இதை நான் அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்று எண்ணினர். ஆனால் இத்தகைய பெண்களைப் பார்த்து ஜீவா,

*"கோழை உலகை வதைக்கும்*
*கொடிய விதியைச் சுடுவாய்*
*ஆண் பெண் சமதை யெனும்*
*அமுத வாக்கை வந்தனை செய்"*

என்று வீராவேசத்தோடு பாடுகிறார். ஜீவாவின் படைப்பான 'புதுமைப் பெண்ணின்' நோக்கமே ஆண்-பெண் சமஉரிமை என்பதாகும். ஜீவா இந்நூலில் கீழ்க்கண்ட கருத்துக்களை எடுத்துக்கூறுகிறார்.

1. வேலை செய்வதில் ஆண்களோடு பெண்களுக்கு சம உரிமை இருத்தல் வேண்டும்.

2. வேலை செய்வதில் கிடைக்கும் கூலி இருவர்க்கும் சமமாய் இருத்தல் வேண்டும்.

3. ஓய்வும், வேலை நேரமும் சமமாய் இருத்தல் வேண்டும்.

4. சமூக காப்பீடு, கல்வி போன்றவற்றில் சம வாய்ப்பும் சமவசதியும் இருபாலர்க்கும் இருத்தல் வேண்டும்.

5. சமுதாய நலவுரிமைகள் சமமாய் இருத்தல் வேண்டும்.

6. பெண்களுக்குப் பல சலுகைகள் அளிக்கப்படவேண்டும்.

7. தாய்-சேய் நல உரிமைகளில் அரசு தனிக்கவனம் செலுத்தல் வேண்டும்.

8. மகப்பேறு ஓய்வு முழுச்சம்பளத்தோடு பெண்களுக்குக் கிடைத்தல் வேண்டும்.

9. தாய்-சேய் நல விடுதிகளும், குழந்தை வளர்ப்பு நிலையங்களும் நாடு முழுவதும் சங்கிலிப் பின்னல் போல் முளைத்துத் தழைக்கவேண்டும்.

மேலும் சமுதாயத்தில் வெவ்வேறு நிலைகளில் பாதிக்கப்பட்டு அடிமைப்படுத்தப்பட்ட பெண்கள் விழிப்படைய பெண்கள், விதியை வெல்லுதல், பழமையைக் கைவிடுதல், பெண்ணடிமையை ஒழித்தல், பொய்ச்சமூகத்தைப் புறக்கணித்தல், உரிமைக்காக உழைத்தல், ஆண் பெண் சமம் என்பதை உணர்தல், கல்வி கற்றல் போன்ற நற்குணங்களை மேற்கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிடுகிறார்.

### *வெற்றிப்பாதையில் பெண்கள்*

பெண்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைக் குறித்து பலர் குரல் கொடுத்தனர். தமிழகத்தில் 19-ம் நூற்றாண்டில் இராமலிங்க அடிகள் தோற்றுவித்த "சுத்தசமரச சன்மார்க்க சங்கம்" ஆண்களைப் போலவே

பெண்களும் எல்லாத் துறையிலும் சமமாக முன்னேற வேண்டும் என்ற கொள்கையைச் செயல்படுத்தியது. இராஜாராம் மோகன்ராய், அன்னிபெசன்ட் அம்மையார், ஈ.வே.ரா.பெரியார், பாரதி போன்றோரும் பெண்ணுரிமைக் குரல் எழுப்பினர். இதனால் பெண்களுக்குப் பேச்சுரிமை, சொத்துரிமை, மணமகனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, ஆண் பெண் சமஉரிமை போன்ற உரிமைகள் பெண்களுக்குக் கிடைத்தன. இதனால் பெண்கள் கல்வி, அரசின் திட்டங்கள், பலதுறை ஈடுபாடு போன்றவைகளில் ஈடுபட்டு புதுமைப் பெண்களாக ஜீவாவின் கனவு நனவாக வளர்ச்சியடைந்தனர்.

இவ்வாறு ஜீவா பெண்கள் முன்னேற்றத்திற்காக உழைத்து பெண்கள் நிலை வளர்ச்சியடைய பாடுபட்டார்.



# காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்

முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்
தமிழ்ப் பேராசிரியர்

## *பிள்ளைக்கவி - விளக்கம்*

தென்பாண்டி வளநாட்டின் சீர்துலக்கும் திருநெல்வேலிப் பதியின் ஒரு பகுதியாக விளங்கும் தச்சனல்லூரில் 1836-இல் தோன்றிய அழியாப் புகழ் பெற்ற அழகிய சொக்கநாதபிள்ளை இயற்றியதே காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் நூல். 'பிள்ளைத் தமிழ்' என்பது தான் போற்ற வந்த பாட்டுடைத் தலைவனையோ, தலைவியையோ சிறுகுழந்தையாக்கிப் பருவங்களுக்குப் பத்துப்பத்துப் பாடல்களாகப் பத்துப் பருவங்களாகப் பகுத்துப் பாடுவதாகும். குழந்தையின் மூன்றாம் திங்கள் தொட்டு இருபத்தொன்றாம் திங்கள் வரை காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என வகுத்துப் பாடப் பெறுவது ஆண்பாற் பிள்ளைத்தமிழாகும். இறுதியில் உள்ள மூன்றினுக்குப் பதிலாக அம்மானை, நீராடல், ஊசல் என அமைத்துப் பாடப்பெறுவது பெண்பாற் பிள்ளைத்தமிழாகும். அருந்தமிழ் விருந்தாகிய இந்நூல் விருத்தப்பா யாப்பில் அமையும். இவற்றின் இலக்கணத்தை எடுத்துரைக்கும் பாட்டியல் நூல்கள் 96 வகைச் சிற்றிலக்கிய வகையுள் ஒன்றாக்கிக் கூறும். இதனைப் 'பிள்ளைப் பாட்டு' 'பிள்ளைக்கவி' எனவும் பெயரிட்டு அழைப்பர்.

*''குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்''* (புறம். 188)

மயக்குகின்ற மக்களைப் பற்றிப் பாடிய பாண்டிய மன்னன் அறிவுடைநம்பி முதல் அருந்தமிழ்ப் புலவரும், அடியவருமாய்த் திகழ்ந்த பெரியாழ்வார் வரையிலும் மழலையின் எழிலைத் தனிப்படவே பாடிவந்துள்ளனர். பெரியாழ்வாரால் வித்திடப்பெற்ற பிள்ளைத்தமிழ், ஒட்டக்கூத்தரால் முழுஉருவம் கொடுக்கப்பெற்று வளர்க்கப்பெற்றதெனலாம். இவ்வாறு

பெருகி வளர்ந்து வந்துள்ள பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையினைத் தெரிவு செய்து, நெல்லை நகரில் எல்லையில்லாப் புகழுடன் கருணைமழை பொழியும் வடிவுடை நாயகியை - காந்திமதித்தாயைப் பாட்டுத் தலைவியாக்கிப் பாடி மகிழ்கின்றார் அழகிய சொக்கநாதர்.

### *பிள்ளைத்தமிழா? பெரியதமிழா?*

இது பிள்ளைத்தமிழா? இல்லை; 'பெரியதமிழாகும்' என்கிறார் சேற்றூர் அருணாசலக்கவிராயர். இதோ அவருடைய பாராட்டு மொழி.

*"சீர்பூத்த நெல்வேலிக் காந்திமதித் தாய்பருவந்தேர்ந்து தேர்ந்து*
*நார்பூத்த பாமாலை புனையுமழகிய சொக்கநாத னென்னும்*
*பேர்பூத்த நாவலன்பிள் ளைத்தமிழென் றுலகறியப் பேரிட்டாலும்*
*ஏர்பூத்த அப்பாடந்பொருள் பெரியதமிழெனப் பேரிசைக்குமன்றோ"*

(சாற்றுகவி)

காந்திமதியம்மையின் கனிவைப் பேசும் இந்நூலின் புலமை வளத்தையும் புதுமைச் சுவையினையும் இனிது கேட்டு உவந்த வள்ளல் முத்துசுவாமிப்பிள்ளை, அழகிய சொக்கநாதருக்குப் பொன்னாடை வழங்கி மணிதிகழ் வைரக்கடுக்கன்களையும் அணிவித்துச் சிறப்பித்தாராம். அம்மட்டோ! இதனால் சடையப்பரைப் போல் திகழ்ந்த வள்ளலின் மேல் அழகிய சொக்கநாதர் 'முத்துசுவாமிப்பிள்ளை காதல் பிரபந்தம்' பாடி பாமாலை சூட்டினார்.

### *பிற படைப்புக்கள்*

ஏட்டுக்கல்வி பயின்ற இவர், நாட்டும் சீர்க்கல்வி பயிற்றும் ஆசிரியராகவும் வீற்றிருந்த புகழ் ஈட்டியவர். இவர் ஏடுகளைப் படி எடுக்கும் இனிய பணியை ஏற்றுச் செயற்பட்டவர். அம்மையைப் பற்றிச் சொல்லோவியம் தீட்டிய இவரே, அம்மையின் திருவுருவையும் வண்ண ஓவியத்திலும் தீட்டிய திறமுடையவராய்த் திகழ்ந்தார் என்கிறார் வெள்ளாகால் சுப்பிரமணியமுதலியார். 'தன் வருமானத்தைப் பற்றிக் கேட்பவரிடம்' அழகிய சொக்கநாதர், "எனக்கு மாசம்பத்து" என்பாராம். ஆம்! "எனக்கு மா சம்பத்து" (செல்வம்) "எனக்கு மாசம் பத்து" என்றும் பொருள் தருமாறு. இவரே, பதசாகித்தியம், சிங்காரபதம், காந்திமதியம்மை

பதிகம், காந்திமதியம்மை கலித்துறை அந்தாதி, சங்கரநயினார் கோவில் கோமதி அந்தாதி, தாணுமால் பதிகம் ஆகிய இன்னபிற நூல்களையும் பாடித் தமிழுக்குப் புதிய அணிசேர்த்துள்ளார். வேம்பத்தூர்ப் பிச்சுவையர், முகவூர் இராமசாமிக் கவிராயர், சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார், முத்துவீருப்புலவர், நெல்லை முத்துப்புலவர் ஆகிய பலர் இவர் காலத்து வாழ்ந்த இனிய தமிழ்ப்புலவர்கள் ஆவர்.

### *நூலின் அமைப்பு*

ஆசிரிய விருத்தப்பாவில் ஆற்றொழுக்காக அமைந்து விளங்கும் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழின் காப்புச் செய்யுளாக அமைவது விநாயகர் வணக்கமாகும். இந்நூலின் அவையடக்கம் முதலியவற்றையும் சேர்த்து மொத்தம் நூற்றுநான்கு பாடல்கள் உள்ளன. இப்பாடல்கள் எல்லாம் தமிழ் இலக்கிய மரபை அடிப்படையாகக் கொண்டு இயற்றப் பெற்றவை. அம்மையைக் குழந்தையாக்கிப் பாடும்போது அம்மையின் இறைமைத் தன்மையையும் இழையோடவிட்டிருக்கின்றார் ஆசிரியர்.

### *நெல்லையின் புகழ்*

தனித்தோங்கிவரும் தமிழைப் பற்றி ஆசிரியர், தெய்வச் செந்தமிழ், பண்முத்தமிழ், மலையத்தமிழ், வண்தமிழ், இன்பத்தமிழ், செப்பரும் முத்தமிழ், ஆய்ந்ததமிழ் எனவெல்லாம் சொல்லாரம் தொடுத்துச் சூட்டி மகிழ்கின்றார். நெல்லை மாநகரின் எழிலையும், ஏற்றத்தினையும் பல இடங்களில் படம்பிடித்துக் காட்டுகின்றார். 'திங்கள்விழா மல்கு திருநெல்வேலியின்' பெருமையினை அவர்,

> *"தமிழ் கொழிக்கும் கழைவனம்"* (50)
>
> *"நிறைபுகழ்ப் பாண்டி வளநாடும் அதன்*
> *முகமனைய நெல்லை நகரும்"* (104)

என்று திக்கெட்டும் பரவும் வண்ணம் முழக்கம் செய்கின்றார். இத்தகைய சீரும் சிறப்பும் நிறைந்த நெல்லை நகரில் வீற்றிருக்கும் அம்மையின் திருப்பெயர் வடிவுடைநாயகி என்பதாகும். இவ்வன்னையைத் "திருவளரும் நெல்லை நகர் வடிவுடைய காந்திமதி" (11) என்றும், "மதில்சூழ் நகரித் திருநெல்லை வடிவை" (8) என்றும் "குன்றார் நெல்லைப்பதி வடிவே" என்றும், "வரைமால் வனத்துத் திருநெல்லை

வடிவே" என்றும், "பொன்னார் நெல்லை வடிவுடையாள்" என்றும் இந்நூலுள் அழகிய சொக்கநாதர் எழில் ஒழுக ஏற்றமுடன் அழைத்து மகிழ்கின்றார்.

நெல்லைக்கு "வேணுவனம், வேய்வனம், அமைவனம்" என்றுள்ள பெயர்களையும் ஆசிரியர் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். இங்குள்ள இறைவன் மூங்கிலில் முளைத்த சிற்றுருக் கொண்ட வேய்முத்தநாதர் ஆவார். இவ்விறைவன் முழுதுகண்ட ராமபாண்டியனின் அன்பான வேண்டுகோளுக்கு இணங்க வளர்ந்து ஓங்கி நின்றான். ஆகவே, நெல்லையப்பரை "வேண்டவளர்ந்த பெருமான்" என்று கூறுவர். பிள்ளைத்தமிழில், "வேணுவனம் அதனில் வேண்டவளர் கண்ணுதற் காட்சியார்" (2) என்று பேசுகின்றார் ஆசிரியர். அருச்சகர் இப்பெருமானுக்குரிய "நெல்லைத்" திருக்கோயில் அங்கணத்தில் உலரப் போட்டுவிட்டுத் திருமஞ்சன நீர் கொண்டு வரத் தண்பொருநை ஆற்றிற்குச் சென்றிருந்தார். அவர் திரும்புமுன் பெருமழை பெய்யத் தொடங்கிற்று. மனக்கவலையுற்ற அருச்சகர் பொருநை ஆற்றிலிருந்து விரைந்தோடி வந்தபோது அங்கே கண்ட காட்சி அவரை மெய்சிலிர்க்க வைத்தது. இறையருளால் நெல்லைச் சுற்றி வேலியாக மழை பெய்ததே ஒழிய, மழையால் நெல் சிறிதுகூட நனையவில்லை. ஆகவே இத்திருத்தலம் "நெல்வேலி" என்ற பெயருடையதாயிற்று. இச்செய்தியினைப் பிள்ளைத்தமிழ் ஆசிரியர்,

> *"அதுலமெய்ச் சிவதபன வேதசன்*
> *மானலும் அருச்சகன் வியந்தாடஅன்று*
> *அளவது மழைப்புனலில் நெல்லுக்கு*
> *வேலியிடும் அனவரத தானர் "* (94)

எனத் தவறாது குறிப்பிடுகின்றார். நெல்லையில் அமைந்துள்ளது தாமிரசபை. இதனையும்,

> *"வான்தரு மாண்பதம் ஊன்றுபு தாம்பிர*
> *மன்றே நின்றாடும் வரதர்"* (19)

என்று கூறி அழகிய சொக்கநாதபிள்ளை மகிழ்கின்றார்.

இவர் நெல்லை வாழ் மக்களின் நெறி நின்ற வாழ்வை வகுத்துக் கூறுமிடத்து, "கொல்லா வீரதர் மிகு நெல்வேலி" (34) என்பார். தன்பொருநை ஆற்றின் அரங்கத்தில் குறுக்குத்துறை உள்ளது. அங்குள்ள குமரகோட்டத்தில் குடிகொண்டுள்ள குமரவேளைக் குறித்து இவர்,

"குறுமா முனிக்கருளும் உருமா மலைக்குமர
குருநா தனைப்பணிகுவாம்" (4)

என்கின்றார். இவ்வாறு அழகிய சொக்கநாதர் சந்தங்கமழ் செந்தமிழ்ப் பாடல்களைத் தம் நூலில் பயன்படுத்திக் கற்பார் நெஞ்சத்தைக் கனிந்துருக வைத்திடுவார்.

"பருவதாரி முதல்விணோர்கள் பரவுமேனை புதல்வியே
படியில்வாழும் உயிர்களாய பயிர்கள்நாடும் எழிலியே
இருவர்தேட அரியர்பாகம் இசையுமாசை மனைவியே
இடைவிடாது துதிசெய்வார்தம் இதயமேவு முதல்வியே
அருவவாதர் அறியொணாத அமலஞான சொரூபியே
அறிவினாலும் விழிகளாலும் அயில்வதாயின் அமிழ்தமே
மருவலார்முன் வெருளுநாத வலிமை ஈய வருகவே
வளமைநீடு திருநெல்வேலி வள்ர்குமாரி வருகவே!"
(58)

என்னும் இந்தப்பா ஒரு வகைச் சந்தப்பாவாகும்.

### சிலேடைச் சிறப்பு

இந்நூலில் சிலேடை அமையுமாறும் பல பாடல்களைப் பாடி அம்மையின் புகழுக்கு அழகிய சொக்கநாதர் அணி சேர்க்கின்றார். அவற்றுள் ஒன்றினைக் கண்டு சுவைப்போம்.

"மணிதேர் சாலிப்புல வரிசை
வளையும் தழையும் புலவரிசை
மறையோர் அகத்தின் முத்தீயும்,
வளரும் களைகள் முத்தீயும்,
பணிநேர் சினத்து மாதர் அங்கம்
பயிலும் பொய்கை மாதரங்கம்
படர்வான் மின்னைக் கொடிதிகழும்,
பலவா மணிப்பொற் கொடிதிகழும்
கணிநீர் கடந்து வாசிக்கும்
கைம்மா இனங்கள் கன, மருக்கும்
கவின்கோ புரம்க கனமருக்கும்" (78)

என்னும் அம்மானைப் பருவப் பாடலில் சொல்லணியாகிய 'மடக்கு'

அமைந்துள்ளது. முத்தும் செந்நெல்லும் நிறைந்து வளைந்து கிடக்கும் வயல்வரிசை அதாவது புல வரிசை, நெல்லையில் புலவர்களின் இசை தழைத்து நிற்கும் (புலவர் இசை தழையும்). மறையோதும் அந்தணர் தம் இல்லங்களில் 'முத்தீப் பொலியும்', வளர்கின்ற மூங்கிற் தழைகள் முத்து ஈயும். மாதர் அங்கங்கள் பயில்கின்ற பொய்கைகளில் மா தரங்கமாகிய பேரலை எழும்; வானில் தோன்றும் மின்னலையும் கொடிது இகழும் பொற்கொடிகள் திகழும் நீரையும் கடந்து மருதம் மணக்கும் (வாசிக்கும்) பூங்காக்களில் கிளிகள் நூல்களை வாசிக்கும்; யானைகளின் இனங்கள்

மேகக் கூட்டத்தைக் கலக்கும் (கனம்மடுக்கும்) அழகிய கோபுரங்களோ வானையும் தொட்டு நிற்கும் (ககனம் அடுக்கும்) என்று இருபொருள் தருமாறு பாடி அழகிய சொக்கநாதர் இறைவியை அம்மானை ஆட வரும் வண்ணம் அன்போடு வேண்டுகின்றார்.

## *மலையத்தமிழ் கேட்க வருக*

அழகுக்கு அழகு சேர்க்கும் வடிவம்மையின் பொன்னுடலில் மணிப்பொற்கலையையும் காதுகளில் இளஞ்சூரியர் போலத் திகழும் குழைகளையும், திருவடிகளுக்குச் சதங்கைகளையும் அணிவித்து அகமகிழும் அழகிய சொக்கநாதரின் கொள்ளை ஆசைக்கு ஒரு சான்று காண்போம். அம்மையின் திருநுதலில் அரும்பிய வேர்வைத் துளிகளை அகற்றிவிட வருக என்கிறார். மணற்சிற்றில் இழைத்து அட்டவுணவைத் தருதற்கு வருக என்றும், உடலில் படிந்துள்ள தூசியினைத் துடைத்திட வருக என்றும், நீரில் குளிப்பாட்டிட வருக என்றும், நெடுங்கண்களுக்கு மையிட்டு மகிழ்ந்திட வருக என்றும், விலைமதிக்க முடியாத பொன் அணிகளைப் பூட்டிட வருக என்றும், என் மடிமீது இருந்து அமுதம் பருக வருக என்றும் கெஞ்சிக் கூத்தாடி அழைத்துப் பார்த்தார்! அம்மை வரவில்லை! இறுதியில்,

*"மலையத்தமிழ் கேட் டுளமகிழும்*
*வாழ்வே வருக வருகவே!"* (52)

என்ற புலவர் வியந்தும் நயந்தும் கூறிக்கூறி அழைக்கின்றார்.

முத்தொழிற் கடவுளர்க்கும், முப்பத்து முக்கோடித் தேவர்கட்கும், முதிர்சுவைக் கலைமகளுக்கும், சீர்காழிவரதனுக்கும் திருக்கடவூர் அபிராமிப்பட்டருக்கும் ஏனைப்பாவலர்க்கும் அருட்பார்வை பொழிந்த அன்னையின் வடிவை நோக்கி,

"கழநரிய பேரருட் கடல்மடை
திறந்தபடி கடையேற்கும் உதவு" (56)

என்று பணிந்து வேண்டுகின்றார் பிள்ளைத்தமிழ் பாடிய பெரும்புலவர்.

## அம்புலியை ஆடவா என அழைத்தல்

'பிள்ளைத்தமிழுக்கு அம்புலி புலி' என்பது ஆன்றோர் மொழி. திங்களைக் குழந்தையுடன் வந்து விளையாடுமாறு பாடுவதாகும். இன்சொற் கூறியும், வேறுபாடுரைத்தும், ஊதியம் கூறியும், அச்சுறுத்தியும் அதாவது திங்களைச் சாம, பேத, தான, தண்டமாகிய நால்வகை உபாயங்கள் கூறி அழைத்துப் பாடும் மரபினைத் தவறாது பின்பற்றியுள்ளார். அம்மை, தன் அழகிய பிஞ்சுக் கைகளால் நிலவைத் தன்னோடு ஆடவருமாறு அழைத்தாள். ஆனால் வெண்திங்களோ விண்திங்கள் என்று எண்ணி வானிலே வேகமாக ஓடியது. அப்போது அழகிய சொக்கநாதர் தன்னைத் தாயாகவே பாவித்துப் பாடும் திறம் வியந்து பாராட்டுமாறு உள்ளது. "அம்மை மகிழுமாறு இவளோடு நீ இதுவரை ஆட வரவில்லை. இவள் உள்ளம் வெகுளுமுன் ஆடவா! இல்லை என்றால் இவளுடைய இனிய மூத்தமைந்தன் யானைமுகன், உலவுகின்ற உன்னை ஒரு கவளம் என்று உண்டால் நீ என் செய்வாய்? மிகுபுகழ் கொண்ட இளையமைந்தன் அறுமுகச் செவ்வேள் வேலைத் தொட்டுவிட்டால் எங்கே சென்று உய்வாய் நீ?" என்றும் பாடுவார். காந்திமதிக்கும் திங்களுக்கும் "மதி" என்று பேர். பால் நிலவைப் பார்த்துப் படித்துப் படித்துச் சொல்கின்றார். ஆனால் மதியில்லா மதி வரவில்லை. எனவே வெறுப்புடன் வெஞ்சொல்லாக வெளிவருகின்றது அவர் பாடல்.

"படித்துப் படித்துப் புகன்றும்
எண்ணிப் பாராய் ஒரு சந்தேனும் மதி
படையா உனக்கு மதி என்னும் பேர்
பகர்ந்த தெவரோ? பல நாளும்
அடித்துப் பாலும் புகட்டுவரோ?" (67)

என்கின்றார். திங்களைப் பல கோள்கள் சூழ்ந்துள்ளன. ஆனால் அம்மையின் முன் மட்டுமல்ல அவள் திருவடிப் புகழ்பாடிப் பரவும் அடியவர் முன்னும் கூடக்கோள் அணுகாது. எனவே அறம் வளர்த்த கையால் அழைப்பதனை அறிந்து அருகில் வருக என்று அம்புலியை (68) அழைக்கின்றார்.

உருவகமும், உவமைநலமும், கற்பனை வளமும், சொன்னயமும், இன்னபிற சிறப்புக்களும் இந்நூலில் சிறப்பாக அமைந்துள்ளன. செடியாய வல்வினைகளைத் தீர்த்து உலகுக்குப் படியளக்கும் வடிவுடையம்மையின் திருக்கை மலர்களைப் புகழும் போது அத்திருக்கைகள் அசுரரை அழித்துத் தெய்வமகளிரின் திருமங்கலநாணைக் காத்த ஆனைமுகன் ஆறுமுகன் ஆகிய இருபிள்ளைகளை ஏந்தியணைத்துத் தூங்கவைக்கும் தொட்டிலாகவும், சிவபெருமானுடைய திருக்கண்களைப் புதைத்து இருசுடர்களை அடைத்து வைத்த சிறைச்சாலையாகவும், அடியவர்க்கு அருள்சுரக்கும் அபயவரதமாகவும், செழுங்கமல மலர் நிதியமாகவும், பைங்கிளிகள் பயிலும் குடும்பையாகவும் தோன்றுவதாக உவக்கும் வகையில் அழகிய சொக்கநாதர் உருவகப்படுத்தியுரைப்பார்.

ஐங்கரத்து அண்ணனுக்கும் அறுமுகச் செவ்வேளுக்கும் இடையில் ஒரு உரையாடல் நிகழ்வதாகக் காட்டும் கற்பனைக் கருத்தினிக்க அமைந்துள்ளது. ஆனைமுகன், தன் தம்பியிடம் "உனக்கு மட்டும் கவின்தோய் முகம் ஆறு காணுமாறு என்ன"? என்று கேட்க அதற்கு முருகவேள்,

"நம்மை ஈன்றவர் உவகை
கொழிப்ப ஒருமித்து என்னை முத்தங்
கொண்டு விளையாடுதற்கு" (54)

என்று கூறியவுடன் அம்மைக்கே அளவிலா மகிழ்ச்சி ஏற்பட்டதாம்.

வருகைப் பருவத்தில் ஒரு பாடல். அழகிய சொக்கநாதர் காந்திமதிவல்லியைக் கனிவோடு அழைக்குமாறு வருகின்றது. "அம்மையே! நீ வாராதிருந்தால் உன் விழிக்கு மை எழுதமாட்டேன். நெற்றிக்குத் திலகம் இடேன். பொன்அணிகளைப் பூட்டேன். உன்னோடு பெருவிருப்புக் கொண்டு பேசேன். உனக்குத் தாய்ப்பாலூட்டேன். தேர் செல்லும் திருவீதியின் வளத்தைக் காட்டமாட்டேன் எனவெல்லாம் அடுக்கிச் சொல்லும் பாடலில் ஒரு தாயின் பரிவினையும் பாசத்தினையும் ஒருங்கே நாம் பார்க்க முடிகின்றது. அப்பாடல் வருமாறு :

"வாராதிருந்தால் இனி நான் உன்
வடிவேல் விழிக்கு மை எழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகம் இடேன்
மணியால் இழைத்த பணி புனையேன்
பேரா தரத்தி னொடு பழக்கம்
பேசேன் சிறிதும் முகம் பாரேன்
பிறங்கு முலைப்பால் இனி யூட்டேன்
பிரியமுடன் ஒக் கலையில் வைத்துத்
தேரார் வீதி வளங்காட்டேன்
செய்ய கனிவாய் முத்தம் இடேன்
திகழும் மணித்தொட்டி லில் ஏந்தித்
திருக்கண் வளரச் சீராட்டேன்
தாரார் இமவான் தடமார்பில்
தவழுங்குழந்தாய் வருகவே!
சாலிப்பதிவாழ் காந்திமதித்
தாயே வருக வருகவே!" (55)

என்று அழைக்கும் கனிவில் இறைவியுடன் ஏற்பட்ட உறவு மேலும் வலுக்கின்றதன்றோ!

## முடிவுரை

"கரும்புதின்னக் கூலியுண்டோ"? "மயிலே மயிலே என்றால் இறகு போடாது" என்றும் நம்மிடையே வழங்கும் வழக்குத் தொடர்களையும் அழகிய சொக்கநாதர் கையாண்டு பிள்ளைத்தமிழை பெரிய தமிழாக்கியுள்ளார். 'பெரியதமிழ்' என்று பெயரிட்டு அழைக்கும் வண்ணம் சொற்சுவையும், பொருட்சுவையும், பழந்தமிழ்ச் சொல்லாட்சியும், பன்னூற் புலமையும், சந்தநடையும், செந்தமிழ் மணமும், கற்பனையும், கவின்மிகு காட்சிகளும், அணியும், அழகு தமிழ்ச் சொல்லோவியமும், இறை நலமும், இளமையின் வளமும், இணைந்தோடப் பாடியுள்ள காந்திமதியம்மை பிள்ளைத் தமிழைக் கற்று அழகிய சொக்கநாதரின் அருந்தமிழ்ப் புலமை விருந்தினை உண்டு உய்தி பெறுவோம்!.



# நூல் மதிப்புரை

தமிழ் இலக்கிய உலகிற்கு ஒரு புதுவரவாக, புதியதொரு தோற்றமாகப் பாவேந்தர் பாரதிதாசனின் பழம்புதுப் பாடல்கள் என்னும் நூல் இவ்வாண்டில் (2005) வெளிவந்திருக்கிறது. பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் உயராய்வு மையத்தின் ஈடுபாட்டுடனும், இரா. இளவரசு அவர்கள் உள்ளார்ந்த ஈடுபாட்டுடனும், இடைவிடாத முயற்சியுடனும் தேடிச் சேகரித்த பாடல்களின் தொகுப்பே இந்நூல்.

பாவேந்தர் பாரதிதாசன் தனது பதின்மூன்றாம் வயதில் (1904) பாடிய பாடல் முதற்கொண்டு 1964-இல் அவர் இயற்றிய வாழ்த்துப் பாடல்கள் வரை 353 பாடல்களையும், தியாகையரது தெலுங்குக் கீர்த்தனைகள் பத்தினை மொழி பெயர்த்து யாத்த பாடல்களையும் தன்னுட்கொண்டு விளங்குகிறது இந்நூல். நூலின் தலைப்பான பழம்புதுப் பாடல்கள் என்பது தனிச்சிறப்பும் பொருட்செறிவும் மிக்கதாகத் திகழ்கிறது.

பாரதிதாசனின் கவிதைத் தொகுப்புகளில் இதுவரை இடம்பெறாதவையாகவும், தமிழுலகு இனிமேல் முதன்முறையாகக் காணக் கூடியனவாகவும் விளங்குகின்ற பாடல்கள் ஆதலால் அவை புதுப்பாடல்களாகும். இந்நூலில் இடம்பெற்ற பாடல்கள் பலதிறத்தன.

அக்காலத்தில் வழக்கிலிருந்த தேசகேசவன் (1922 - 1923) ஆத்ம சக்தி (1923 - 24), மணிக்கொடி (1933 - 34), நகர நூதன் (1934 - 38) ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் (1935) போன்ற பல்வேறு இதழ்களிலிருந்து தேடிச் சேகரித்த பாடல்கள்.

பிரசண்ட விகடன், தமிழ் முரசு, அண்ணாமலை அரசரின் விழா மலர் போன்ற பல மலர்களிலிருந்தும், வாழ்த்து மடல்களிலிருந்தும் கண்டறியப் பெற்றவை.

பாவேந்தர் பாடிய பாடல்களைக் கேட்டு மனதில்
தேக்கி வைத்த நண்பர்கள் கூறியவை. தமிழ்ச்

சான்றோர்களின் நூல்களில் கட்டுரைகளில் இடம்பெற்றவை. பாவேந்தரின் கையெழுத்து வடிவில் கிடைத்தவை. பாரதியின் நட்பும், தொடர்பும் ஏற்படுவதற்கு முன்னர், கனகசுப்புரத்தினமாகப் பாடியவை எனப் பாரதிதாசனின் கவிதைத் தொகுப்புகளில் இதுவரை இடம் பெறாதவையாகவும், முன் முறையாக வாசகர்கள் காணக்கூடியவையாகவும் அவை புதுப்பாடல்களாகப் பலதிறத்தவையாக உள்ளன.

முனைவர் இரா. இளவரசு என்னும் தேனீ, தேடித்தேடி அலைந்து அலைந்து, பாவேந்தர் பாரதிதாசன் நட்டுவைத்த கவிதை மலர்த் தோட்டங்களில் இதுவரை நாம் கண்டிராத மலர்களிலிருந்து தேனை எடுத்து, அதன் வாசத்தையும் இனிப்பையும் அப்படியே இணைத்து அமைத்த அருமையான தேனடையாக இந்நூல் திகழ்கிறது.

பாடல்களுக்குப் பொருத்தமான தலைப்பிட்டு, ஒவ்வொரு பாடலின் இறுதியில் அப்பாடல் தனக்குக் கிடைத்த விதம், அப்பாடலின் இயல்பு, இசை, சொற்களின் தன்மை போன்றவிவரங்களையும் குறிப்புகளாகக் கொடுத்திருப்பது முனைவர் இரா. இளவரசு அவர்களின் உழைப்புத் திறனை வெளிப்படுத்துகிறது.

இந்நூலில் பாரதிதாசன் பாடிய பக்திப் பாடல்கள் பல உள்ளன.

*பிறந்து விட்டேன் முன்னே*
*வினைப்பய னதனால்*
*பெற்றதுன்பம் போதும்*
*நானுன்னை என்றும்*
*ஒரு நொடியில்*
*மறந்தறியேன்.* (பாடல் 39)

என்று முருகனை நோக்கிப் பாடுகிறார். இலக்குமியை, சரசுவதியை, பராசக்தியை வணங்கிப் பாடியிருக்கிறார்.

அடிமைப்பட்டிருந்த நம்நாட்டு விடுதலைக்கு உரிமைக் குரல் கொடுத்த பாடல்கள் பல உள்ளன. சமுதாய விழிப்புணர்வும், கல்வியின் இன்றியமையாமையும், திராவிட இயக்கச் சார்பும், இந்தி எதிர்ப்பு இயக்க உணர்வும், தமிழ்நாட்டின் தேவைகளும், நாட்டு நடப்புகளும், வரலாற்று நிகழ்வுகளும், அரசியல் சாடல்களும் நிறைந்த புதையலாக இந்நூல் விளங்குகிறது.

நீவிர் எந்தக் கட்சி? என்றபாடல் வினா-விடை உத்தியில் பாடப்பட்டிருக்கிறது. அவர் காலத்து அரசியல் தலைவர்களைத் தன் பாட்டு வரிகளால் தட்டிக் கேட்கிறார் பாவேந்தர்.

ஙஞணநமன ஙஞணநமன
இரு குருவிகள் கூட்டுக்குள்
இப்படிப் பாடின பாட்டுக்கள்

யரலவழள யரலவழள
என்றொரு பூனை நூலத்தில்
மெதுவாய் ஏறிய காலத்தில்

கசடதபறகசடதபற
எனப் பறந்தன சிட்டுகள்
எதிரில் சின்ன வெட்டுகள் (பாடல் 226)

சிறுவர்க்காகப் பாடிய இப்பாட்டில் தமிழ்ப் பாடத்தையும் நடத்துகிறார்.

பழைமைக்கும் பழைமையாய்ப், புதுமைக்கும் புதுமையாய்ப் பாவேந்தரின் பல்வேறு பரிமானங்களை இந்நூற்பாடல்கள் பறைசாற்றுகின்றன. மண்ணுக்குள் கிடந்த வைரத்தை எடுத்துப் பட்டைதீட்டி மின்னச் செய்கின்றபணியை முனைவர். இரா. இளவரசு அவர்கள் செய்திருக்கிறார்.



பதிப்பாசிரியர்

## பேராசிரியர். இரா. சதாசிவம்

### ஆசிரியர் குழு

இராசா. திரு. முருகதாஸ் தீர்த்தபதி

பேரறிஞர். திரு. தமிழண்ணல்

பேரறிஞர் திரு. செ. கந்தசாமி

டாக்டர் திரு. ந. சேதுராமன்

பெரும்புலவர் திரு. இரா. இளங்குமரன்

பேரறிஞர் திரு. அ. தட்சிணாமூர்த்தி

திரு. சே. அரிராமநாதன்

திரு. வே. திருவரங்கராசன்

பதிப்பாசிரியர், இரா.சதாசிவம், 2/404, மருதுபாண்டியர் தெரு, வட்டாட்சியர் நகர், மதுரை-20. ✆ 2532879.
ஆசை அச்சகம், மதுரை. ✆ 26 222 50, 98434-32484

# மதுரைத் தமிழ்ச்சங்க
# நூற்றாண்டு மலருக்கு

அறிஞர்களே!
புலவர்களே!
சான்றோர்களே!

**தமிழ், தமிழ்ப் பண்பாடு,**
**தமிழ்ச் சமுதாயம், தமிழ்ச்சங்கம்**
மற்றும்
**வள்ளல் பாண்டித்துரைத் தேவர்**
குறித்த கட்டுரைகளை வழங்குவீர்!

தொடர்பு முகவரி


பதிப்பாசிரியர்
செந்தமிழ்
மதுரைத் தமிழ்ச்சங்கம்,
மதுரை – 625 001.
போன் : (0452)-5575615

முதல்வர்
செந்தமிழ்க் கல்லூரி,
மதுரை – 625 001.
போன் : (0452)-2343707